# மேனியழகு மிளிர இயற்கை உங்களுக்குத் தரும் சீதனம்

VEP




## வேப்

வேப் சோப்பு, உங்கள் சருமம் உலர்ந்து சுருங்கிவிடாமல் பாதுகாத்து, மழ மழப்பாக இருக்க உதவுகிறது.

கொழிக்கும் நுரை, நீடிக்கும் நறுமணம், உங்கள் மேனியின் இளமையையும் அழகையும் பேணிக் காக்கிறது வேப்.

கேரளா சோப்ஸ் & ஆயில்ஸ் லிமிடெட்
கோழிக்கோடு.

## வேப்

**மேனிக்கு மெருகூட்டும்
இயற்கையின் கைவண்ணம்**

FDS KSO 3383A TAM


"ஹல்லோ! என்ன ஆச்சரியமா?
இரண்டு மணி நேரமா சிவாஜி
ஃபிலிம்ஸ் டயல் பண்றேன்,
ராங் நம்பரா கிடைக்குது.
தயவு செஞ்சு
எந்த ராங் நம்
பர் டயல்
பண்ணினா
சிவாஜி
ஃபிலிம்ஸ்
கிடைக்கும்னு
சொல்றீங்களா?"


"பொண்ணுக்கு கல்யாணம்
நிச்சயம் பண்ணிட்டேன்;
விஸ்வாசி மேலும் உயரணும் நீதான்
கவனிச்சுக்கணும். அம்மா,
சொல்லிட்டேன்!"


மதுவிலக்குக் கொள்கையிலே ஏதோ குழப்பம் இருக்காப்பலே இருக்கே?
இதோ பாருங்க, பல்ராம்! குழப்பறதுங்கிற விஷயத்திலே எனக்குக் குழப்பமே இல்லேன்னு நான் சொன்னா அதை என்னை நீங்க குழப்பிக்க மாட்டீங்கங்கிறதிலே எனக்குக் குழப்பமே இல்லே!"


"ஷூட்டிங் இருக்குன்னு சொல்லிட்டு ஜாலியா
ஃபிரண்ட்ஸோட பிக்னிக் போய்
சீட்டாடிட்டு வரீங்களா... இருங்க... இருங்க...
அதோ கிட்டே சொல்லி...."


"கோபார் காஸ் ஸ்டவ்விலே
தயாரிச்ச பூரி சப்ஜி டேஸ்டாத்தான்
இருக்கு. ஆனா தங்க ஏலம்
ஸ்டவ்விலே தயாரிச்ச பூரி
அர்க்கை அதை விட ருசி,
சந்தேகமேயில்லே!"



# ஒரு கொலை ராகம்!

ஒரு காடு. துஷ்ட மிருகங்கள் பலவும் உலவும் காடு. நடுவில் பயணிகள் தங்கும் ஓர் சிறிய ஹோட்டல்.

''டேய் பாபு .... அந்த நாற்காலியை வெச்சுண்டு என்னடா பண்றே... எலக்ட்ரிக் கனெக்‌ஷன்லாம் வேறே கொடுத்துண்டு இருக்கயே....''

..''அப்பா இதெல்லாம் உனக்குத் தெரியாது. ஜப்பான்லே மிகப் பெரிய ஹோட்டல்களோட மாடிலே 'ரிவால்விங் சேர்'னு வெச்சு அந்த ஹோட்டல்ல தங்க வர்ர பயணிகளை அந்த 'சேர்'கள்லே உட்கார வெச்சு, உட்கார்ந்தபடியே ஊரைச் சுற்றி' காட்டுவாங்களாம்... ஒரு காலத்துலே நானும் நம்மளோட இந்த ஹோட்டலை பெரிசா கட்டி அது மாதிரி சுற்றுகிற நாற்காலிகளைப் பொருத்தப் போறேன்... அதான் அந்த மாதிரி நாற்காலிகளை உருவாக்கறதுக்கு ஆராய்ச்சிப் பண்ணிண்டிருக்கிறேன்'' ஒரு விதக் குரூரத்துடன் சிரிக்கிறான்.

''என்னமோ போ... நீ செய்யறது எல்லாம் எனக்குக்கொஞ்சம் கூடப்பிடிக்கலே...'' என்கிறார் கண்ணபிரான்.

''அப்பா.... அநாவசியமா என்னோட விஷயங்களிலே தலையிடாதே...என்'Ego'வை எவராவது தட்டிப் பார்த்தா நான் பொல்லாதவனா மாறி விடுவேன். என் விஷயத்துலே தலையிட்டே, நீ மிலிட்டரியிலே இருக்கச்சே செஞ்ச விஷயத்தை அம்பலப் படுத்தி விடுவேன்'' பாபுவின் சிரிப்பில் மறுபடியும் குரூரம்.

''வேண்டாண்டா... நான் உன்னோட விஷயத்துக்கே வரலே'' கண்ணபிரான் உள்ளே போய்விடுகிறார்.

இராணுவத்தில் இருந்தபோது கண்ணபிரான் ஒரு மேஜரின் மனைவியிடம் தகாத முறையில் நடந்து கொள்ள மேஜர் பார்த்து விடுவதால் அவரைச் சுட்டுவிட்டு ஓடிவந்து விட்டவர். இது சம்பந்தமாக போலீஸால் தேடப்படுபவர்.

பாபு ஒரு சரியான வக்கிர குணம் உள்ளவன். இறந்த காட்டு மிருகங்களின் தோல்களை அகற்றிப் பதப்படுத்தி விற்பனை வேறு செய்கிறான். ஹோட்டல் வரவேற்பறையில் ஓர் எலும்புக் கூட்டை நிற்க வைத்து அதன் எலும்பு விரல்களில் அறைச் சாவிகளை மாட்டி வைத்திருப்பவன்.

வாழ்க்கைக்குப் பணம்தான் அத்தியாவசியம். அதைச் சம்பாதிப்பதுதான் ஒருவனது குறிக்கோளாக இருக்க வேண்டும்.. பணத்தை எவ்வழியில் வேண்டுமானாலும் சம்பாதிக்கலாம். பணத்துக்குப் பிறகுதான் உறவு... ஆசாபாசங்கள் முதலியன என்பது அவனது சித்தாந்தம்.

இதற்கு நேர் மாறானவர் கண்ணபிரான். அவரது வாழ்க்கையில் இரண்டு இருட்டறைகள். ஒன்று ராணுவத்தில் இருந்த போது அவர் செய்த தவறு. இரண்டாவது அவரது இளைய மகன் ராம்ஜி தந்தையிடம், கோபித்துச் சிறு வயதில் வீட்டை விட்டு ஓடிவிட்ட வேதனை. இத்தகைய விஷயங்களால் பாதிக்கப்பட்டவராக ஒடுங்கிப்போய், மகன் பாபுவின் அட்டகாசங்களுக்கும் வக்கிரங்களுக்கும் பணிந்து பூச்சி போன்று வாழ்கிறார்.

தான் தயாரித்த சுற்றும் நாற்காலியில் எலெக்ட்ரிக் ஒயர்களை இணைத்து ஸ்விட்ச் போட்டால் நாற்காலி முழுவதும் மின்சாரம் பாயும்படி செய்கிறான் பாபு.

அவனுள் மிருகத்தனம் வளர்கிறது. எவனாவது அதிகப் பசையுள்ள புள்ளி தனது ஹோட்டலில் தங்க வந்தால் மின்சார நாற்காலியில் உட்கார வைத்து ஆளை க்ளோஸ் செய்து வெளித் தெரியாதபடி



செய்து பணத்தை அபேஸ் செய்துவிட்டால் தனது எதிர்காலக் கனவுகள் நனவாகும்' என்கிற பேராசை அவனுடைய உள்ளத்தின் அடித்தளத்தில் பிறந்து சிறிது சிறிதாக வளர்கிறது.

இத்தருணத்தில் தந்தையைக் காணத் தேடி வருகிறான் கண்ணபிரானின் இளைய மகன் ராம்ஜி.

வீட்டை விட்டு ஓடிப் போனதும் பல இடங்களில் சுற்றி சிங்கப்பூர் போய், ஒரு பணக்காரப் பெண்ணைக் காதலித்து, மணந்து அப்பெண்ணின் தந்தை மறைந்து அத்தனை பணத்துக்கும் அதிபதியாகி பெரும் பணக்காரனாகிவிடுகிறான் ராம்ஜி.

அழகான மனைவி, கை நிறையப் பணம். பத்து வயதில் புத்திசாலியான பெண்— இப்படி நிறைவான வாழ்க்கை நடத்தும் ராம்ஜியின் உள்ளத்தில் தந்தையைப் பிரிந்து ஓடிவந்தது பெரிதும் வாட்டுகிறது. இந்தியாவில் காட்டு நடுவில் ஓர் ஓட்டலில் தந்தை இருப்பதை நண்பர் மூலம் அறிந்து தந்தையைத் தேடிக் கிளம்புகிறான்.

ராம்ஜி கிளம்பு முன் மகள் மோகனா ஒரு வாக்குறுதியைத் தந்தையிடம் வாங்கிக் கொள்கிறாள்.

''அப்பா என் மேலே ஒனக்குப் பாசம் இருக்கிறாப் போல ஒம்மேலேயும் தாத்தாவுக்குப் பாசம் இருக்கும். அதனாலே தாத்தாவைப் பார்த்ததும் அவரே உன்னை அடையாளம் கண்டு பிடிக்கணும்.. நீ போய் ஒரு நாள் முழுக்க அவராலே கண்டு பிடிக்க முடியலேன்னா அப்புறமா நீயே சொல்லு'' என்கிறாள் மோகனா.

மகளின் வேண்டுகோளுக்கு ஒப்புதல் அளித்துவிட்டுப் பதினைந்து தினங்களுக்குள் திரும்புவதாகக் கூறி ராம்ஜி செல்கிறான்.

தந்தையைக் கண்டதும் ராம்ஜியின் உள்ளத்தில் பாசம் பொங்குகிறது. ஆனால்



டைரக்டர்: "அவுட்டோர் ஷூட்டிங்குக்காக அடுத்த வாரம் ஒரத்த நாடு...செட்டி நாடு.. போறோம்!"

ஹீரோயின்: "அந்த நாடுகளுக்குப் போக பாஸ்போர்ட் ஏற்பாடெல்லாம் முடிஞ்சிருச்சா டைரக்டர் ஸார்?"

•

அவன்: "வந்தது வரட்டும்னு நாளைக்கு ஒரு ஃபைவ் ஸ்டார் ஹோட்டலில் சாப்பிடப்போறேன்!"

இவன்: "ஏன், சாதா ஹோட்டலிலேயே தின்று மாவாட்டிச் சலித்துப் போச்சா..?"

— உ. ராஜாஜி



தந்தை கண்ணபிரானே தன்னை அடையாளம் கண்டு கொள்ளாததால் மகளுக்கு அளித்த வாக்குறுதியை மனத்தில்கொண்டு மகன் என்று சொல்லாமல் ஒரு பயணிபோல் அந்த ஹோட்டலில் ராம்ஜி தங்குகிறான்.

டவுனுக்குப் போக வேண்டிய வேலை இருப்பதால் சென்று மறுநாள் வருவதாகக் கூறிக் கண்ணபிரான் கிளம்புகிறார்.

அவர் போனதும் பாபுவின் உள்ளத்தில் மிருகத்தனம் தலையெடுக்கிறது.

தனது வழக்கப்படி ராம்ஜியின் வருகையை ஹோட்டல் ரிக்கார்டுகளில் அவன் எழுதாமல் விட்டு விடுகிறான்.

பெட்டி நிறையப் பணமும் அலட்சியப் பேச்சுமாய் இருக்கும் ராம்ஜியின் ஒவ்வொரு பேச்சும், செய்கையும் பாபுவின் உள்ளத்தில் பணப் பேராசையைக் கொழுந்து விடச் செய்கிறது.

'ராம்ஜியிடம் இருப்பதை விட அப்பணம் தன்னிடத்தில் இருந்தால் பாதுகாப்பாக இருக்கும்' என்று பாபு கூற, "ஓ. கே... நீங்களே பாதுகாப்பாக வைத்துக்கொள்ளுங்கள்.... போகும்போது வாங்கிக்கொள்கிறேன்" என்று பாபுவிடமே பணப் பெட்டியை ராம்ஜி கொடுத்ததும்... பாபுவின் ஒவ்வொரு உரோமக் காலிலும் கொலை வெறி கூத்தாடுகிறது.

"வாழ்க்கையில் நம்மைத் தேடி வரும் வாய்ப்புக்களைச் சரியாக உபயோகப்படுத்திக் கொண்டால்தான் உயர முடியும்... இதற்காக ஒருசில தவறுகள் செய்வதைப் பற்றி நான் கவலைப்படுவது கிடையாது. தவறு செய்யும் மனோநிலையை நமக்குக் கொடுக்கும் கடவுள்தான் குற்றவாளி" என்பதுபோன்று பாபுவுடன் பேசும்போது ராம்ஜி கூறுகிறான்.

பாபுவின் கொலை வெறி தூண்டி விடப்பட்ட விளக்காய்ச் சுடர் விடுகிறது.

மின்சார நாற்காலியில் ராம்ஜியை உட்கார வைத்து...

மின்சார இணைப்பைப் போட்டு...

—ராம்ஜி கொலை செய்யப்படுகிறான்.

சகோதரன் என்று தெரியாமல் ராம்ஜியை கொலை செய்துவிட்டு ராம்ஜியின் பணத்தை படிக்கட்டில் பதுக்கி வைக்கிறான் பாபு.

பிணத்தை அப்புறப்படுத்திப் புதைத்து விடுகிறான்.

மறுநாள் திரும்பும் கண்ணபிரான் ராம்ஜி பற்றி விசாரிக்கிறார்.

'மூன் தினம் காட்டுப் பக்கம் போனவன் திரும்பி வரவில்லை' என்று கூறுகிறான் பாபு.

கண்ணபிரானுக்கு நம்பிக்கை வரவில்லை. தங்கள் ஹோட்டலில் தங்க வந்தவன் காணமல் போய்விட்டான் என்பதால் 'போலீசில் சொல்லி விசாரிக்கலாம்' என்கிறார்.

ஹோட்டலில் ராம்ஜி வந்து தங்கினதற்கு எவ்வித ஆதாரமும் கிடையாது. தந்தை எவ்விதக் கவலையும் பட வேண்டாம் என்றும்... அநாவசியமாகப் பிரச்னைகளை அவர் எடுத்தால் அவரது ராணுவ ரகசியத்தை வெளிப்படுத்தி விடுவதாகக் கூறி அவரது வாயை அடைத்து விடுகிறான்.

காட்டு நடுவில் இருக்கும் தங்கள் ஹோட்டலுக்கு ராம்ஜி வந்தது எவருக்கும் தெரியப்

போவதில்லை என்கிற தைரியத்தில் ராம்ஜி மிதந்து கொண்டிருக்கும்போது—

பதினைந்து தினங்கள் ஆகியும் எவ்விதத் தகவலும் வராததால் ராம்ஜியைத் தேடிக் கொண்டு அவரது மனைவி சித்ராவும், மகள் மோகனாவும் வருகின்றனர்.

வந்ததும், தன் தந்தை ராம்ஜியைப் பற்றியும், ராம்ஜியின் தந்தையும், தனது தாத்தாவுமான கண்ணபிரான் பற்றியும் விசாரிக்கிறாள் சிறுமி.

பாபுவின் உள்ளத்தில் பெரும் அதிர்ச்சி. சொந்தச் சகோதரனையே கொன்றுவிட்டோமே என்கிற கழிவிரக்கம் அவனைவாட்டுகிறது. ஆனால் அவனுள் பெரும்பான்மையாக ஆக்கிரமித்துக் கொண்டிருந்த அரக்கத்தனம் பாசத்தை வெல்கிறது.

ராம்ஜி என்று எவரும் வரவில்லை என்றும், கண்ணபிரான் என்ற பெயரில்இருந்த ஒருவர் ஹோட்டலை விட்டுப் போய் ரொம்ப நாளாகிறது என்றும் மோகனாவிடமும், சித்ராவிடமும் கூறிவிடுகிறான்.

இரண்டு தினங்கள் அங்கு அவர்கள் தங்க அனுமதிக்கிறான்.

தந்தையைத் தனியாகக் கூப்பிட்டு, ராணுவ ரகசிய பயத்தை அவரிடம் தோற்றுவித்து பிளாக் மெயில் செய்து அவர் தன்னைக் கண்ணபிரான் என்று காட்டிக்கொள்ளக் கூடாது என்றும் வேலைக்காரன் முத்து என்று கூறும்படியும்செய்து விடுகிறான்.

இரண்டு தினங்கள் சமாளித்து விட்டு சித்ராவையும் மோகனாவையும் அனுப்பி விட்டால் பிரச்னை எல்லாம் முடிந்துவிடும் என்று கனவு காண்கிறான்.

ஆனால்—

சிறுமி மோகனாவின் செயல்கள் பாபுவுக்குச் சவாலாக அமைகின்றன.

'அங்கிள்... அங்கிள்....' என்று பாபுவை அழைத்தபடி தனது தந்தை ராம்ஜியைப் பற்றி நச்சரித்துக் கொண்டே இருக்கிறாள்.

ராம்ஜியின் கர்ச்சீப்பைக் கண்டுபிடித்து அது தன் தந்தையுடையது என்கிறாள். ராம்ஜியின் டை பின்னும் மோகனாவுக்குக் கிடைக்கிறது.

தன் தந்தை நிச்சயம் அங்கு வந்திருக்க வேண்டும் என்று நம்புகிறாள்.

ராம்ஜியின் பெட்டியை எடுத்து பணம் சரியாக இருக்கிறதா என்று பாபு சரிபார்த்துக்கொண்டிருக்கும்போது அதை ரகசியமாக மோகனா பார்த்து விடுகிறாள்.

சித்ரா ஹோட்டலை விட்டு டவுனுக்குப் போன் பண்ணப் போகிறாள். கண்ணபிரானும் வெளியே சென்றிருக்கிறார்.

சிறுமி மோகனாவும் பாபுவும் மட்டுமே ஹோட்டலில் இருக்கும் சமயம் தனது ரகசியங்கள் அத்தனையும் மோகனாவுக்குத் தெரிந்துவிட்ட விஷயம் பாபுவுக்கு தெரிந்து விடுகிறது.

மின்சார இணைப்புக்களைப் போட்டு அதில் மோகனாவை உட்கார வைத்துக் கொன்று விடப் பாய்கிறான். மோகனா திமிறி ஓடிப் போய் எலும்புக் கூடு பின்னால் உட்கார்ந்து கொள்கிறாள்.

பழைய எலும்புக் கூட்டை அப்புறப்படுத்திவிட்டு, ராம்ஜியின் எலும்புக் கூட்டை அங்கு வைத்து விட்டிருக்கிறான் பாபு.

கொலைகாரனுக்கும், இளம் குருத்துக்கும் ஜீவ மரணப் போராட்டம்.

உச்சக் கட்டத்தில்—

தனது கண்ணியில் தானே மாட்டிக் கொள்கிறான் பாபு.

• • •

பார்வையாளர்களைஇரண்டு மணிநேரம் கதைக் கயிறால் கட்டிப் போட்டுவிடுகிறார் ராது.

பாபுவாக நடிக்கும் விஸ்வநாதன் தவிர வேறு யாரை இப் பாத்திரத்துக்குப் போட்டிருந்தாலும் நாடகம் சோபித்து இருக்காது. நாடகத்தின் இயக்குனரும் இவர்தான். அவருக்குத் துணை நிற்பது கபடம் VS கபடமின்மை என்னும் போராட்டத்தைப் புரிந்து கொண்டிருக்கும் சிறுமி மஞ்சுளாவின் இயல்பான நடிப்பு.

ஒரு சீரியலான சஸ்பென்ஸ் திரில்லரை தமிழ் நாடக மேடையில் காண்பது அபூர்வ விஷயம்தான்!

பெருமையை ராதுவும் விஸ்வநாதனும் சமமாகப் பிரித்துக் கொள்கிறார்கள்.

நவ்ரங் ஆர்ட் தியேட்டருக்கு 'ஒரு கொலை ராகம்' ஒரு திருப்பு முனை.

— மதனு மிருத்யுஞ்சயன்

புகைப்படங்கள் : மன்னை மூர்த்தி

---

அடுத்தவாரம்:

புது வாழ்வு தந்த பழைய விழா!

பாக்கிய ராஜ், ராதிகா, சரிதா முதலிய பலர் திரும்பிப் பார்க்கிறார்கள்!

உடன் செல்பவர்: சலன்

# காளிதாசன் சன்மானம்

— ஜி. சந்திரசேகரன்



உலகப் புகழ் பெற்ற மகா கவிகளில் காளிதாஸனைப் போன்று கலைகளிலும் சிறந்த அறிவுடன் விளங்கிய மற்றொருவரைக் குறிப்பிடுவது எளிதல்ல. சங்கீதம், நாட்டியம், ஓவியம் போன்ற நுண் கலைகளைப் பற்றிய நுணுக்கமான செய்திகளை மகா கவிஞன் ஆங்காங்கே தனது காவிய நாடகங்களில் எந்த அளவுக்கு விளக்கிக் கூற இயலுமோ அந்த அளவுக்குப் பொருத்தமாகவும், யாவரும் ரசிக்கத் தகுந்த விதத்திலும் சொல்கிறான். எனவே அவனுடைய பெயருடன் இணைந்த விருதொன்றைச் சிறந்த சங்கீத மேதைகளுக்கு வழங்குவதென்று தீர்மானித்ததற்காக மத்தியப் பிரதேச அரசைப் போற்ற வேண்டும். விருதுடன் ஒரு லட்ச ரூபாய் பொற் கிழியையும் பரிசாகத் தந்திருப்பது மிக மிகப் பெருமைக்குரியது.

இதில் இன்னொரு விஷயமும் உண்டு. லட்ச ரூபாய் பொற்கிழி என்று தீர்மானித்த பின், வடக்கே ஒருவரையும், தெற்கே ஒருவரையுமாக இரு வித்வான்களை இதற்கு தகுதி உடையவர்கள் என்று தேர்ந்தெடுத்த பின்னர் சன்மானத்தை ஆளுக்குப் பாதியாக பிரித்துத் தராமல் தலா லட்ச ரூபாய் என்று வெகுமதியை இரட்டிப்பாக்கித் தந்திருக்கிறார்கள். இந்தப் பெருந்தன்மையை எவ்வளவு போற்றினாலும் தகும்.

பாராட்டப் பெறும் கலைஞர்கள் பரிசுக்கும் விருதுக்கும் மிகவும் தகுதி வாய்ந்தவர்கள். ஒருவர் செம்மங்குடி; மற்றொருவர் மல்லிகார்ஜுன மன்சூர். பண்டித மல்லிகார்ஜுன மன்சூர் ஹிந்துஸ்தானி சங்கீதத்தை நன்கு பயின்று பிரபலமானவர். கர்னாடகாவைச் சேர்ந்தவர். எழுபது வயதை எட்டியவர். தார்வார் சங்கீத கலாசாலைக்கு முதல்வராக இருந்து ஓய்வு பெற்றவர். காயன சமாஜ மகாநாட்டில் தலைமை தாங்கி உரையாற்றியவர். சமீபத்தில் டி. வி.யில் அவர் பாடியதை ரசித்தவர்கள் இங்குள்ளார்கள். ஏன், செம்மங்குடி ஸ்ரீநிவாச ஐயரே தாம் அவர் சங்கீதத்தை நேரில் கேட்டு ரொம்ப அநுபவித்திருப்பதாகச் சொல்கிறார்.

பத்துப் பன்னிரண்டு வயதிலிருந்தே இசைப் புலமையை வெளிக் காட்டியவர் ஸ்ரீமான் செம்மங்குடி ஸ்ரீநிவாச ஐயர். அருமையான இசைப் பரம்பரையில் தோன்றியவர். இசையின் சாரத்தைப் பிழிந்து வழங்கிய பிடில் திருக்கோடிக்காவல் கிருஷ்ண ஐயரின் சகோதரியின் புதல்வரா விருப்பதுடன் வம்சத்திற்கே அணி கலனாய் சங்கீத சாஸ்திரத்தில் திளைக்கிறார். இவர் இசைப் பயிற்சி பெறக் குருவாக அமைந்தவர்களும் சாமானியமானவர்கள் அல்லர். கோட்டு வாத்திய நிபுணர் சகாராமராவ் பாவமான சங்கீதத்தை மிகவும் குளிர்ச்சி ததும்பும் இசை வடிவத்தில் வழங்கியவர். அவரிடமே சிறு வயதில் செம்மங்குடி வித்தியாப்பியாசம் தொடங்கினார். பிற்பாடு, சங்கீத பூபதி என்று ரசிகர்களால் பட்டம் சூட்டப்பெற்ற மகாராஜபுரம் விசுவநாத ஐயரிடம் அறிவு வளரும் பிராயத்தில் செம்மங்குடி சிஷ்யனாய் வித்தை கற்றார். ஆயினும் சொந்தத்தில் இவருடைய தனிப் பாணி ஒன்று ரசிகருள்ளங்களைக்கவர்ந்தது. தஞ்சை ஜில்லாவில் நாதசுர வித்து



✠ ராமா வரைந்த செம்மங்குடி கார்ட்டூன்

குஜராத்தில், அழுவதையே தொழிலாகக் கொண்டுள்ள பெண்கள் பலருண்டு. இங்கு, இறந்தவருக்காக அழுவதற்கு ஆட்கள் இல்லாவிட்டால், இத்தகைய பெண்களை அணுகுகிறார்கள். இப்பெண்கள் குறிப்பிட்ட நேரம் வரை அழுவதற்



கென்று கட்டணம் நிர்ணயித்து வைத்திருக்கிறார்கள். சரியான நேரத்தில், கறுப்புச்சேலை அணிந்துகொண்டு, சடலம் இருக்கும் இடத்திற்கு தன் 'கோஷ்டி'யுடன் அழுவதற்குச் சென்று விடுகிறாள், தலைவி.

தகவல் : வி. சகுந்தலா

---

வான்கள் நிறைய இருந்த காலம். அமோகமாய் நாயன ஆலாபனங்களைச் சதா அனுபவித்தவருக்கு விறுவிறுப்பான முறையில் பாடுவதென்பது வெகு எளிதாகியது. குரல் என்றைக்குமே அவருக்குச் சௌகரியத்தை அளிக்கவில்லை. இருப்பினும் உழைப்பாலும், அரிய கற்பனை வழிகளாலும் தம் சாரீரத்தை சாணை பிடித்து விட்டார். அதில் வெற்றியும் கண்டார்.

இருபது வயதுகூட நிறையாதபோது — 1927ம் ஆண்டில் சென்னையில் காங்கிரஸ் மகாசபையுடன் சேர்ந்து நடந்த சங்கீத மகாநாட்டில் அரும்பெரும் ஜாம்பவான்களின் இடையே இளைஞர்களில் இவரையே தேர்ந்தெடுத்துப் பாடும்படி அழைப்பு அனுப்பினார்கள். பிரமாதமான எதிர்காலம் கிட்டும் என்ற நம்பிக்கையை அன்றே இவர் ரசிகர்களின் இதயங்களில் ஊன்றச்செய்தார்.

இருதிகளை வாக்கேயக்காரர்கள் எவ்வளவு பூர்த்தியுடன் படைத்திருப்பார்களோ அதனை நினைத்து வழுவாத சம்பிரதாயத்துடன் இசைப்பவர் இவரை விட்டால் வேறு இரண்டொருவரையே சொல்லலாம்.

நல்ல நாட்டுப் பற்றுடன் தோன்றியவரானதால் தேசிய கீதங்களை அழகழகான மெட்டுக்களில் ஜனங்களுக்கு முதன் முதலில் அளவு கடந்து வாரி வழங்கியவர். அதிலும் மகா கவி பாரதியின் கீதங்களை மனத்தை அள்ளும் விதம் இசைத்தவர். அக்காலங்களில் 'கல்கி' அவர்கள் இவருடைய அருமை பெருமைகளை விடாது வாசகர்களுக்கு ஞாபகப் படுத்தி வந்தார்.

தாமே நூல் நூற்று அந்த நூலினால் நெய்த கதர் வேட்டி முதலியவைகளை அணிகிறவர் சங்கீத உலகில் செம்மங்குடி ஒருவர்தான்.

மகா வைத்தியநாத ஐயரைப் பற்றிப் புகழ்கிறவர்கள் அவருடைய ஆன்மிக அனுஷ்டான நியமங்களைப் பாராட்டி அவையே அவருக்கிருந்த ஆற்றலின் அடித்தளம் என்பார்கள். இன்று இவ்விஷயத்தில் அப்பெரியாரை ஓரளவு நினைவுகூர வைப்பவர் செம்மங்குடிதான்.

சுவாதித் திருநாள் மகாராஜாவின் சாகித்தியங்களை முத்தைய பாகவதரின் அடிச்சுவட்டையே பின்பற்றி சீர்படுத்தி உலகிற்கு அளித்தவர் செம்மங்குடி. அன்றே தொடங்கி சதாசிவப் பிரம்மேந்திராளுடைய வேதாந்த பரமான சாகித்தியங்களை ரசிகருள்ளங்களில் பதிய வைத்தவர். அவைகளை சுரப்படுத்தி இன்று நூல் வடிவிலும் வழங்கியுள்ளார்.

''இன்று அநேக வித்துவான்கள் தங்கள் சொந்தக் கீர்த்தனங்களைத் தாங்களே அரங்கேற்றுகிறார்களே. நீங்களும் செய்து பார்க்கலாமே'' என்றால், ''பெரும் புதையலை நம்மிடம் ஒப்புவித்துவிட்டுச் சென்றிருக்கிறார்களே, அவைகளை நாம் ஒழுங்காய்ப் பாடினால் போதும்'' என்று சொல்லி திருப்தி அடைவார்.

தம் சிஷ்யர்களிடம் அலாதி அன்பும் அவர்களைக் குறித்துப் பெருமையும் கொண்டவர். அவர்களுக்கு உபகாரம் செய்வதில் துளியும் பின்வாங்காதவர். தனிப்பட்ட உதவிகள் மட்டுமின்றித் தொழிலில் அவர்கள் முன்னேறவும் உதவுவார்.

பாடுவதற்கு மட்டுமின்றிப் பேசுவதற்கு மேடைக்கு அழைக்கப்பட்டாலும் திண்டாடுகிறவர் அல்ல. அழுத்தம் திருத்தமாய் வார்த்தைகளைக் கூட்டி நன்கு சொற்பொழிவாற்றும் அரிய வரம் பெற்றவர்.

வடநாட்டினருக்கு மட்டுமே காளிதாசன் விருதையும் பரிசையும் வழங்காது தென்னாட்டினர் ஒருவருக்கும் தந்ததை நியாயமான நியாயத் தீர்ப்பாகக் கருதி நாமெல்லோரும் பெருமைப்படுகிறோம்.

---

ஜோக் எழுத்தாளர் : ''பத்திரிகையில் நான் நிறைய ஜோக் எழுதறேன்...கவனிக்கறீங்களா...?''

மற்றவர் : ''கவனிக்கறேன்...ஆனா நீங்கதான் ஒண்ணைக் கவனிப்பதில்லை...''

ஜோக் எழுத்தாளர்: ''என்ன?''

மற்றவர் : அவையெல்லாம் ஜோக்தானா என்பதை...!''

- கிணத்துக்கடவு ரவி



# நாடாளுமன்ற நாடகம்!

நாடாளுமன்றத்தில் ஒரு நாடகம் நடத்தவேண்டிய நிலைக்கு நிதி அமைச்சர் ஆர். வி. தள்ளப்பட்டதற்கு நமது அனுதாபங்கள்.

பத்திரிகைக் காகிதத்தை இறக்குமதி செய்வதும் அதற்கு உள்நாட்டில் விலை நிர்ணயம் செய்வதும் அரசுதான். விலை நாளுக்கு நாள் உயர்ந்து வந்திருக்கிறது. போதாக்குறைக்கு பதினைந்து சதம் புதிதாக இறக்குமதி வரி.

இது பத்திரிகைப் பொருளாதாரத்தை அளவுக்கு மீறி சோதிப்பதாகும் என்றும், பத்திரிகை சுதந்திரத்தின் மீதே கைவைப்பதாகும் என்றும் நாடாளுமன்றத்திலே எதிர்ப்பு தெரிவிக்கப்பட்டது.

விவாதத்துக்கு பதிலளித்த ஆர். வி. ஒரு நாளிதழை உயர்த்தி ஆட்டினார்! ''எத்தனை சதவிதம் விளம்பரம் தெரியுமா இதில்? விளம்பரங்களை அச்சிடவா அந்நியச் செலாவணியைக் கொட்டி காகிதம் தருவிக்கிறோம்?'' என்று வசனம் பேசினார்!

பல மாநில முதல்வர்கள் பத்திரிகை விளம்பரங்களுக்கு வரி விதிக்கலாம் என்றார்களாம். ஆர். வி. பெரிய மனசு பண்ணி அதை ஏற்கவில்லையாம். அதற்குப் பதில் பத்திரிகைக் காகிதத்தின் மீது வரி விதித்தாராம்! — பெருமையாகக் கூறிக் கொண்டார்.

விளம்பரங்களைப் பத்திரிகைகளில் வெளியிடுவதே பாபம் என்பது போலவும் விளம்பரம் வெளியிடும் பத்திரிகைகளெல்லாம் கொள்ளை லாபம் அடிக்கின்றன என்பது போலவும் தொனிக்க ஆர். வி. பேசியுள்ளார்.

விளம்பரங்கள் ஏன் இடம் பெறுகின்றன? நாளிதழின் விலையைக் குறைத்து மக்களுக்கு வழங்கத்தான். மிகப்பெரிய தேசிய நாளிதழ்கள் இன்று 60 பைசாவுக்கும் ஐம்பது பைசாவுக்கும் கிடைக்கின்றன என்றால் காரணம் விளம்பரங்கள் தாம். அவை இல்லையெனில் அடக்க விலை ரூபாய் இரண்டோ மூன்றோ ஆகும்!

விளம்பரங்கள் பல முக்கிய பணிகளை ஆற்றுகின்றன. மக்களுக்கு எதை வாங்குது எதை ஒதுக்குவது என்று முடிவுக்கு வர வாய்ப்பளிக்கின்றன. மக்களைப் பங்குதாரர்களாகக் கொண்டுள்ள பெரிய நிறுவனங்கள் தாங்கள் நாட்டின் முன்னேற்றத்துக்கு ஆற்றிவரும் பணிகளை விளம்பரங்கள் மூலம் மக்களுக்கு உணர்த்துகின்றன. தொழில் துறைகளில் எழும் பிரச்னைகளை மக்கள் மன்றத்தில் வைக்கவும் விளம்பரங்கள் உதவுகின்றன. மக்களுடைய சேமிப்பை முதலீடாக்கத் தூண்டுகின்றன. இப்படி எத்தனையோ. எல்லாவற்றையும் விட முக்கியமாக, மக்கள் குறைந்த விலையில் நாளிதழ்களையோ சஞ்சிகைகளையோ வாங்கித் தங்கள் பொது அறிவை வளர்த்துக்கொள்ள விளம்பரங்கள் பேருதவி புரிகின்றன.

விளம்பரங்களால் பயன் இல்லை எனில் மத்திய, மாநில அரசுகள் போட்டி போட்டுக்கொண்டு முழுப்பக்க விளம்பரங்களை நாளிதழ்களுக்குத் தருவானேன்?

விளம்பரங்களால் பத்திரிகை நிறுவனத்துக்கு லாபம் என்றே கொண்டாலும் ஆண்டு இறுதி லாபத்தின் மீது அரசு வரி விதிக்காமல் இருந்து விடவா போகிறது? மிச்சம் மீதி உள்ளதைத்தானே பங்குதாரர்கள் பெறமுடியும்?

''சூவனிர்'' போட்டு, விளம்பரத்துக்குப் பக்கத்துக்குப் பத்தாயிரம் ரூபாய் வாங்கியதில்லையா இந்திரா காங்கிரஸ் கட்சி? அதைவிடவா பத்திரிகைகள் கொள்ளை லாபம் அடிக்கமுடியும்?

பட்ஜெட்டுக்கு முன்பே இறக்குமதியாகிக் கிடங்கிலே இருக்கும் காகிதத்துக்குக் கூட 15 சதவிகிதம் இறக்குமதி வரி கேட்கிறதே, அரசு வர்த்தக கார்ப்பொரேஷன், அதைவிடவா கொள்ளை லாபத்துக்கு உதாரணம் வேண்டும்?

சிறிய பத்திரிகைகளுக்குச் சலுகை காட்டப்போவதாக அறிவித்துள்ளார் ஆர். வி. ஜனநாயகத்தில் இதைவிட அதர்மமான காரியம் இருக்கமுடியாது. சில பத்திரிகைகளுக்கு மட்டும் தனிச் சலுகை என்றால் அவை நன்றிக் கடன் பட்டுப் போகும். அரசை நியாயமாக விமர்சிக்கும் துணிவு இல்லாது தவிக்கும்!

ஆர். விக்குக் கூறிக் கொள்கிறோம்: விளம்பரத்தின் மீது வரியானால் என்ன? காகிதத்தின் மீது வரியானால் என்ன? எல்லாமே ஜனநாயக விரோதம்தான். பத்

1981 மார்ச் 29

ரௌத்திரி பங்குனி 16

மலர் : 39 இதழ் : 35



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

திரிகை சுதந்திரத்தையும் மக்களின் தகவல் பெறும் அடிப்படை உரிமையையும் பாதிப்பவைதான்.

பத்திரிகைகள் விலையைக் கூட்டியோ, பக்கங்களைக் குறைத்தோ, விளம்பர விகிதங்களை அதிகரித்தோ இந்த இறக்குமதி வரியைச் சமாளிக்க முயலட்டும். அதன் பின்விளைவாக வாசகர் தரும் ஆதரவின் அளவையொட்டி நிமிர்ந்து நிற்கட்டும்; அல்லது தடுமாறட்டும்.

இதற்காக அநீதியான வரி விதித்த நீங்கள், அதை நியாயப்படுத்த அபத்தமான வாதங்களைக் கூறுகிறீர்கள்!

தோசையைத்தான் திருப்பிப் போடமுடியும்; இட்டிலியை அல்ல!

---




தமிழ் வாரப் பத்திரிகைகளிடையே உள்ள போட்டா போட்டியில் அவை பெண்களின் ஆடைகளைப் படங்களில் படிப்படியாகக் குறைத்து வந்து, கடைசியில் முழு நிர்வாண மாக்குவதில் சாதனை புரிந்துள்ளன. விரைவில் வெற்றி விழா கொண்டாடப்படும் என்று எதிர்பார்க்கலாம்!

ஒரு பத்திரிகை பெண்ணின் பின் அழகைப், பிரசுரித்து 'கலை' என்கிறது. இன்னொரு பத்திரிகை முன்னழகைப் பிரசுரித்து 'கவிதை' என்கிறது. இதில் ஹிப்பாக்ரிஸி துளிக்கூட இல்லை — சொன்னால் நம்புங்கள்!

ஒரே ஒரு குறை. படங்களைப் பார்த்தால் ஏதோ மேல் நாட்டுப் பத்திரிகைகளிலிருந்து கத்தரித்து ஒட்டிப் பிரசுரித்த மாதிரி தோன்றுகிறது. தமிழ்ப் பத்திரிகைகளுக்கு நிர்வாண போஸ் தர தமிழச்சிகள் அகப்படாமல் போனது துரதிர்ஷ்டம்தான். விரைவில் இந்தக் குறையும் நீங்கும் என்றும், தமிழ்ப் பெண் குலத்துக்குப் பெருமை சேர்க்கும் விதமாக மாடல்களின் பெயர்கள், புகைப்பட நிபுணர்களின் பெயர்கள் ஆகியவற்றுடன் தமிழ்க் 'கலை'யும் தமிழ்க் 'கவிதை'யும் பவனி வரும் என்றும் எதிர்பார்ப்போமாக!

•

தாழ்த்தப்பட்டோருக்கு இட ஒதுக்கீடு செய்யும் கொள்கைக்கு நாடாளுமன்றம் பூரண ஆதரவு தந்திருக்கிறது. இதை யாருமே ஆட்சேபிக்க முடியாது.

எந்த அளவுக்கு இடம் ஒதுக்குவது, எத்தனைக் காலத்துக்கு என்பதுதான் பிரச்னை.

இந்த ஆண்டு இட்டு நிரப்பப்படாத இடங்களை அடுத்த ஆண்டுக்குக் கொண்டு சென்று கூடுதலாக இட ஒதுக்கீடு செய்வது அநீதி. இதனால் சில சமயம் நூறு சதவீதம் ஸ்தானங்களும் தாழ்த்தப்பட்டோருக்கே சென்றுவிடுகிறது.

இதுபோன்ற காரணங்களால் தான் குஜராத்தில் கிளர்ச்சி. அந்தத் தீ இன்னும் அணையவில்லை; புகைகிறது. வழக்கம்போல் அரசு ஆர். எஸ். எஸ்., முன்னாள் ஜனசங்கம்; இன்றைய பி.ஜே.பி. மீது பழி சுமத்தித் தப்பிக்கப் பார்க்கிறது.

•

பட்டப் படிப்புக்கு அப்பால் நடக்கிற உயர் கல்வி, ஆராய்ச்சி ஆகியவற்றுக்குக் கூடவா இட ஒதுக்கீடு தேவை? இருபானி சுட்டிக் காட்டியது போல பட்டப் படிப்பு வரை முன்னேறிவிட்டவர்கள் அதற்கு அப்பாலேனும் திறமையின் அடிப்படையில் போட்டியிட வேண்டுமே தவிர சலுகை அடிப்படையில் அல்ல. மருத்துவம், பொறி இயல் போன்றவற்றில் உயர் கல்வி பெறுகையில் 'ஆற்றலுக்கே முதலிடம்' என்ற கொள்கை புறக்கணிக்கப்படுமானால் அது சமூகத்துக்கும் நல்லதல்ல; சலுகை பெறுவோருக்கும் நல்லதல்ல.

•

அரசியல் சாசனம் காலம் காலமாக இட ஒதுக்கீடு செய்தவாறே இருக்க வேண்டும் என்று கூறவில்லை. அவ்வப்போது கால வரம்பு ஒத்திப்போடப்பட்டு வருகிறது. இவ்வாறு ஒத்திப்போடப்படுவதே அரசும் மக்களும் தாழ்த்தப்பட்டோர் நிலையை உயர்த்துவதில் வெற்றி காணவில்லை என்பதை உணர்த்துகிறது. தாழ்த்தப்பட்டோரிலும் வசதி படைத்தவர்களே அதிகமாக சலுகை

களை அனுபவிக்கின்றனர். வறுமையில் உழல்பவர்கள் தொடர்ந்து நலிகின்றனர். மனக் கசப்பு வளர்கிறது.

கொள்கை அளவில் தாழ்த்தப்பட்டோருக்கு இட ஒதுக்கீடு அவசியம் என்று ஒப்புக்கொள்வோமாயினும் நடைமுறைச் சட்டங்களில் பல மாற்றங்கள் தேவைப்படுகின்றன.

●

சிங்கப்பூர் ஏர்லைன்ஸ் விமானங்களில் பயணம் செய்பவர்கள் இனி வானில் பறக்கும்போதே சூதாடலாம். சூதாட்ட காஸினோ விமானத்துக்குள்ளேயே அமைந்துள்ளது! மேன்மேலும் பயணிகளை ஈர்க்க இந்தத் திட்டம். நியூஸ் வீக் தரும் செய்தி இது.

இதற்குப் போட்டியாக ஜப்பான் ஏர் லைன்ஸ் குளியலுக்கு வெந்நீர் தொட்டிகளை விமானத்துக்குள் அமைக்கலாம். கேஷா பெண்மணிகள் குளிப்பாட்டிவிடக் காத்திருப்பார்கள்!

ஏர் பிரான்ஸ் பின்தங்குமா? நைட் கிளப் நடத்தி ஸ்டிரிப் டீஸ் காட்சிகளை அரங்கேற்றும்!

ஏர் இந்தியா மகாராஜா தாம் என்ன செய்வது என்று மூளையைக் குடைந்து கொண்டிருக்க வேண்டாம். ஆர். வி. யிடம் கேட்டு கறுப்புப் பணப் பத்திரங்களை வாங்கி வைத்துக்கொண்டு விநியோகித்தால் போதும்!

●

கறுப்புப் பணப் பத்திரங்களை அயல் நாட்டுச் செலாவணியில் வாங்கலாம். அதாவது, டாலர், ஸ்டெர்லிங், ஃபிராங்க் போன்றவை தந்து பெறலாம். இந்தத் திட்டம் கொண்டு வரப்பட்டதே பல அமைச்சர்கள் தங்களிடம் உள்ள கறுப்புப் பணத்தை வெளுப்பாக்க உதவத்தான் என்று கருதப்படுகிறது. அதுவும் அயல் நாட்டு பேரங்களில் கமிஷனாகப் பெறப்பட்டு, ஸ்விஸ் பாங்கில் ஊறுகாய் போட்டு வைத்துள்ள கோடிக் கணக்கான டாலர் அல்லது ஸ்டெர்லிங்குகளை இந்தியாவுக்குக் கொண்டு வர பல முன்னாள், இந்நாள் அமைச்சர்களுக்கு இத்திட்டம் வரப்பிரசாதம். ''யாருடைய பணம்? எப்படி வந்தது? என்ன கணக்கு?'' என்று எதுவுமே கேட்கப்பட மாட்டாது அல்லவா?

''கறுப்புப் பண முதலைகள் மன்னிக்கப்படலாம் என்றால் அதைவிட அற்பமான குற்றங்கள் பலவற்றுக்காக நமது சிறைச் சாலைகளில் வாடும் கைதிகளையும் விடுவித்து விடலாமே'' என்கிறார் எம். வி. காமத். நீதி மன்றங்களுக்கு வேலை குறையும்; அரசுக்கும் சிறைச்சாலைகளை நிர்வகிக்கும் செலவு குறையும்! போலீசுக்கும் நிம்மதி. ஜெய் ஹிந்த்!

●

ஜனதா ஆட்சியின்போது நடந்த தங்க ஏலம் பற்றி விசாரிக்க அமைக்கப்பட்ட பூரி கமிட்டி 'மின்னுவதெல்லாம் பொன்னல்ல' என்று நிரூபிக்கப் படாத பாடு பட்டிருக்கிறது. ஏலத்தால் நமது தேசத்துக்கு



✖ விமானத்துக்குள் சூதாட்டம்

ரொம்ப நஷ்டம் ஏற்பட்டது என்றும் தவறான நடைமுறைகள் மேற்கொள்ளப்பட்டன என்றும் அறிக்கை சமர்ப்பித்துள்ளது.

''மொரார்ஜி, எச். எம். பட்டேல் ஆகியோர் மீது அரசியல் நோக்கில் சேற்றை வாரிப் பூசுவதே அறிக்கையின் நோக்கம்'' என்கிறார் சுப்பிரமணிய சுவாமி.

தேசாயையோ, பட்டேலையோ அழைத்து விசாரிக்காமலேயே கமிட்டி ஆய்வு நடத்தி அறிக்கையும் சமர்ப்பித்தது குறித்து சுப்பிரமணிய சுவாமி ஆச்சரியம் தெரிவித்துள்ளார்.

''நாடாளு மன்றம் விவாதிக்கட்டும்; அல்லது அரசு தேசாய் மீது வழக்குத் தொடரட்டும்'' என்கிறார். ''ரிஸர்வ் பாங்கின் தங்கக் கையிருப்பு ஜனதா பதவிக்கு வந்தபோது 220 டன்; ஜனதா ஆட்சி முடிவுறும்போது 26? டன்'' என்று புள்ளி விவரமும் தந்திருக்கிறார்.

தங்க ஏலக் கொள்கை நாட்டுக்கு நல்லது என்று நம்பியதில் ஒருவேளை மொரார்ஜியும் பட்டேலும் தவறு இழைத்திருக்கலாம். ஆனால் சுயநல துர்நோக்கில் அவர்கள் செயல்பட்டதாக எண்ண ஆதாரம் ஏதும் இல்லை – இதுவரை.

மின்னுவதெல்லாம்...

✖ தேசாய்



✖ எச். எம். பட்டேல்



# வஸந்த்! வஸந்த்!

## 13. பத்தா; நாப்பதா...

கலவரப்பட்ட கணேஷ் மரத்தடி வஸந்தை அவசரமாக சைகையில் கூப்பிட்டான்.

"என்ன பாஸ்?"

"ஷ்!.... குரலைத் தாழ்த்திக் கொண்டு "வஸந்த் நீ அவனை அடிச்சியா?"

"சேச்சே தொடலை! நான் பார்த்தபோது புறக்கடையில் சாஷ்டாங்கமாகக் கிடந்தான். ஏன் மயக்கம் தெளிஞ்சுட்டானா?"

"தெளிஞ்சு அழகா தெளிவா பொய் சொல்ல ஆரம்பிச்சிருக்கான். அவனை அடிச்சது நீயும் நானுமாம்."

"அடப்பாவி! இப்ப என்ன ஆகும்?"

இன்ஸ்பெக்டர் வெளியேவருவார். "மிஸ்டர் வஸந்த் கொஞ்சம் இங்க வரீங்களா" என்பார்.

"இன்ஸ்பெக்டர் வெளியே வந்தார். "மிஸ்டர் வஸந்த் கொஞ்சம் இங்க வரீங்களா" என்றார்.

"என்ன ஸார்?"

"அந்த ஆள் முழிச்சுக்கிட்டான். அவன் சொல்றது உங்க ரெண்டு பேரையும் இன்க்ரிமினேட் பண்ணுது. நான் அப்பச் சொன்னதுக்கு கெக்கேன்னு சிரிச்சீங்க. ஒரு போலீஸ் ஆபீசருக்கும் கொஞ்சம் இன்ஸ்ட்டிங்ட்டிவ்வா சொல்ல முடியுங்கறதை மறந்துட்டீங்க..."

கணேஷ், "ஸார்! கேஸ் ரிஜிஸ்டர் ஆகியிருக்கா?" என்றான்.

"இல்லே! ரிஜிஸ்டர் பண்ணப் போறேன். அந்த ஆளு கம்ப்ளெய்ன்டே கொடுக்கப் போறாரு. ரிக்கார்ட் பண்ணிக்கிட்டு அப்புறம் இன்வெஸ்டிகேட் பண்ணப் போறேன். அதுவரைக்கும் நீங்க எங்கேயும் போயிறாதீங்க என்ன?"

"நீங்க ஸ்டேட்மெண்ட் எடுத்துக்கறதுக்கு முன்னாலேதாங்க அந்த ஆளைப் பார்த்துப் பேச அனுமதிப்பீங்களா?"

"மாட்டேன்! உங்க வக்கீல் வேலையெல்லாம் என்கிட்டக் காட்டாதீங்க. வஸந்த்! எங்க தங்கியிருக்கீங்க?"

"ஏன் ஸார்?"

"ராத்திரி ஸ்டேஷன் லாக் அப்பிலே தங்கவேண்டி வரும்" என்று சிரித்துவிட்டு உள்ளே போனார்.

வஸந்த், "என்ன பாஸ் மாட்டிக்கிட்டோமா?" என்று கணேஷைக் கலவரத்துடன் பார்த்தான்.

"மா என்ன? அவன் உன்னைத்தான் அரஸ்ட் பண்ணப் போறதாத் தெரியுது. இருந்துட்டு வா, காலைல விடிஞ்சதும் பெயில் ஏற்பாடு பண்றேன். கவலைப்படாதே."

"என்ன பாஸ் விளையாட றீங்களா? நான் முன்னைப் பின்னே ஜெயிலுக்குப் போயிருக்கேனா? என் மானம் என்ன ஆறது? மரியாதை என்ன ஆறது? எப்படிப் பட்ட வம்சம்!"



''பின்னே ஏன் அந்த ஆளை அடிச்சே? என்னவோ உன் கராத்தே வேலையை எல்லாம் அவன்கிட்டக் காட்டியிருக்கே!''

''என்ன பாஸ்! நீங்களே என்னைச் சந்தேகிக்கப் போகுமா?''

''நான் உனக்குச் சொன்னது ஒண்ணு. நீ செய்தது ஒண்ணு.''

''நிச்சயம் அடிக்கலை பாஸ்.''

''அடிக்காட்டிக்கூட ட்ரெஸ்பாஸ், ஹவுஸ் பிரேக்கிங், எதுல வேணா உன்னை இப்ப அரஸ்ட் பண்ணலாம். அந்தாளை வேறே பகைச்சுக்கிட்டிருக்கே...''

''இப்ப என்ன செய்யறது? பேசாம லா பாயிண்டைப் போட்டுக் குழப்பி விட்டுறலாமா?''

''பார்க்கலாம். நீ எதுக்கும் தயாரா இரு. ராத்திரி ரெண்டு பேரையுமே கைது செஞ்சாக்கூடப் பரவாயில்லை. ஹோட்டல் பிரச்னை விட்டுது.''

இன்ஸ்பெக்டர் வெளியே வந்து ''ரெண்டு பேரும் என்கூட வரீங்களா? ஸ்டேஷன்ல போய் இன்வெஸ்டிகேஷனை வெச்சுக்கலாம்.''

''சரி, நீங்க போங்க. கார்ல வரோம்.''

போலீஸ் நிலையத்தின் கட்டிடம் தற்காலிகம் என்று தெரிந்தது.

வாசலில் போர்டு இரண்டு சவுக்குக் குச்சிகளில் தொங்கிக் கொண்டு நிற்க அதன் தலையில் பல்பு அபாயகரமாகத் தொங்கிக்கொண்டிருந்தது.

வஸந்த் காரை நிறுத்திவிட்டு ''ஜன்னல்லாம் பூட்டிடலாமா பாஸ் ராத்திரி தங்கல் இருக்கலாம்.''

''வேண்டாம் வா. தங்கினு நீதான் தங்கப் போறே.''

''என்ன பாஸ்! கைகழுவி விட்டுடுவீங்க போலிருக்கே?''

''ரெண்டு லாயர் இருக்கோம். ஒரு லாயர் அரெஸ்ட் ஆறதுக்கு, இன்னொருத்தன் அவனை வெளியே கொண்டு வரத்துக்கு! பயப்படாதே!''

வஸந்த், உள்ளே நுழையும்போதே சுற்று முற்றும் பார்த்துக் கொண்டே ''பரவாயில்லே. நல்ல காத்தோட்டமா இருக்கு'' என்ற கணேஷை முறைத்தான். லாக் அப் அறை தெரிந்தது. பின் பக்கத்தில் யார்டு தெரிந்தது. அதில் குச்சியின் உச்சியில் ஒற்றை பல்ப். நாலடி சதுர நோட்டீஸ் போர்டில் அரசாங்க பழுப்பில் கத்தையாக அறிக்கைகள் சேகரிக்கப்பட்டுத் தொங்கின.



ட்பூட்டி போர்ட் பள்ளிக்கூடக் கரும் பலகையிலிருந்து அந்த நிலையத்தில் ஒரு சப் இன்ஸ்பெக்டர் அவருக்கு சப் — ஆர்டினேட் ஒருத்தர் ஒரு ஹெட் கான்ஸ்டபிள், நான்கு பி.ஸி. ஒரு ஸ்டேஷன் ரைட்டர் இருப்பதாகத் தெரிந்தது. இதில் சப் — ஆர்டினேட் பதவி காலியாக இருப்பதும் தெரிந்தது. உள்ளே நுழைந்த வஸந்த், ''எங்கே கிரைம் போர்டைக் காணும்? என்ன இன்ஸ்பெக்டர் இது! கிரைம் போர்ட் இல்லே, ஏரியா மேப் இல்லே, விஸிட்டிங் ஆபீஸர் லிஸ்ட் இல்லே, என்ன போலீஸ் ஸ்டேஷன் நடத்தறீங்க!'' என்றான்.

''அதை நீங்க விஸிட்டிங் போலீஸ் ஆபீஸரா வர்றபோது கேட்டுக்குங்க!''

''என்ன பாஸ்! நம்ம டி. ஐ. ஜி. ராஜேந்திரன் சொல்லுவாரில்லே. பாதி போலீஸ் நிலையங்களில என்னென்ன ரிக்கார்ட்ஸ் வெச்சுக்கணும்னு கூடத் தெரியாதுன்னு.''

''இத பாருங்க, டி.ஐ. ஜி. பேரை எல்லாம் உள்ள விட்டு எனக்குப் பயம் காட்ட வேண்டாம்.''

''சேச்சே! உங்களைப் போல ஆசாமிங்களை பயங்காட்டறதாவது. டி.ஐ.ஜி. ராஜேந்திரன் நம்ம பாஸ் கணேஷுடைய கிளாஸ் மேட். அவர் ஒருமுறை எங்க கிட்டக் குறிப்பிட்டார், எந்த ஊர்ல எந்த போலீஸ் ஸ்டேஷனுக்குப் போனாலும் உடனே அதைப் பத்தி சின்னதா ஒரு வர்ணனைக் குறிப்பு எடுத்து அனுப்பச் சொன்னார் அதுக்குத்தான்...''

## தலைப்புக் கொடுங்கள்!

**பரிசு ரூ 500/-**

இந்த இதழில் இடம் பெற்றுள்ள சிறுகதைகளுக்குப் பொருத்தமான தலைப்பு கொடுங்கள்.

நான்கு தலைப்புகளையும் கோடிட்ட இடங்களைப் பூர்த்தி செய்து சரியாக எழுதுவோருக்கு பரிசு ரூ 500/—

ஒருவருக்கு மேல் சரியான விடைகள் எழுதினால் பரிசுத்தொகை பகிர்ந்தளிக்கப் படும்.

தபால் கார்டில் மட்டுமே எழுதவும். கதைக்குத் 'தலைப்பு' என்று குறிப்பிடவும்.

முடிவு தேதி ஏப்ரல் 15



இப்போது இன்ஸ்பெக்டரின் முக பாவத்தில் கொஞ்சம் மாற்றம் தெரிந்தது.

''உக்காருங்க.''

''பரவாயில்லே! அந்த ஆள் என்ன ஸ்டேட்மெண்ட் கொடுத்திருக்கான்?''

''அடிச்சது நீங்கதான்னு கிளியராக் கொடுத்திருக்கான்.''

''அப்படியா? எதுக்கு அடிச்சமாம்?''

''நான் படிக்கிறேன் பாருங்களேன்.''

அவர் காகிதத்தைப் பிரித்தார். முதலில் சில வரிகளைச் சத்தமின்றிப் படித்துவிட்டு —''இன்றுபிற்பகல் சொல்லப்பட்ட இருவரும் வந்தார்கள். தம் பெயர் கணேஷ் என்றும் வசந்த் என்றும் சொன்னார்கள். என்னிடம் வியாபாரம் பேசினார்கள். அவர்கள் எதைக் குறித்து வியாபாரம்பேசுகிறார்கள்என்று எனக்குச் சரியாக விளங்கவில்லை. நான் அவர்கள் உரம் பற்றியோ விதைநெல் பற்றியோ பேசிக் கொண்டிருக்கக் கூடும் என்று நினைத்ததால்தான் தொடர்ந்து அவர்களுடன் பேசினேன். இருவரும் பணம் கொண்டு வருவதாகச் சொல்லிக் கொண்டு வெளியே போனார்கள். சற்று நேரத்தில் இருவரும் திரும்பி வந்தார்கள்.

''என்னய்யா பணம் கொண்டு வந்திருக்கிறீர்களா?'' என்று கேட்டதற்குச் சில பாசாங்குப் பதில்கள் தந்தார்கள். திடீரென்று ஒருவர் என்னைப் பிடித்துக்கொள்ள மற்றவன் என்னைத் தாக்கி, மோசமாய் அடித்துப் போட்டார்கள். நான் நினைவிழந்தேன்.''

இன்ஸ்பெக்டர் நிமிர்ந்து ''என்ன சொல்றீங்க?'' என்றார்.

''நல்லா கதை சொல்லியிருக்காரு அந்த ஆள்.''

''நீங்க அங்க போகவே இல்லியா?''

''போனோம். போகாம இல்லே, முதல் பாகம் ஏறக் குறைய அந்த ஆள் ஸ்டேட்மெண்ட்படிதான் நடந்தது. போனோம் வியாபாரம் பேசினோம் எல்லாம் சரிதான். அதுக்கப்புறம்தான் ரீலு செமை ரீலு.''

''அப்புறம் நீங்க போகவே இல்லையா?''

''என்ன ஸார், எங்களைப் பொய்யிலே மடக்கலாம்னு பார்க்கறீங்களா? நான்தான் சொன்னேனில்ல எதுக்காக எப்ப போனேன், என்ன பார்த்தேன்; நான் போனபோது இந்த ஆள் மயக்கமா சந்துகிட்டக் கிடந்தார். நான் போய் இந்த ஆளைக் காப்பாத்தி வண்டிலே போட்டுக்கிட்டு கொண்டு வந்திருக்கேன். ஸ்டேட்மெண்டைப் பாருங்க! கனி முத்திப் போச்சு!''

''நீங்க எதுக்கு ரெண்டாந் தடவை போனீங்க? அதான் எனக்கு இன்னும் சரியா விளங்கலே.''

வஸந்த் கணேஷைப் பார்த்தான். ''என்ன பாஸ்?''

கணேஷ், ''இன்ஸ்பெக்டர்! இந்த ஆள் உதைபட்டதுக்கும் முற்பகல்ல நடந்த கத்திக் குத்துக்கும் சம்பந்தம் இருக்கு. இந்த வட்டாரத்தில ஏதோ பெரிசா ஒரு குற்றம் நடந்திருக்கு... நடக்கப்போறது, அல்லது நடந்துக்கிட்டிருக்கு. எல்லாத்தையும் ஒட்டு மொத்த

மாப் பார்க்கணும். ''ராஜ ராஜன் கிணறு தெரியுமா உங்களுக்கு?''

''என்னது அது?''

''இந்தக் கிராமத்தில உள்ள பழங்காலத்துக் கோயில், அதில உள்ள கிணறு.''

''கிணத்துல ஆளே அடிச்சுப் போட்டிருக்காங்களா?''

''இல்லே! அது ஏதோ சரித்திர சம்பந்தப்பட்டதுன்னும் சிலே அல்லது புதையல்னு நினைக்கிறோம். அதில இந்த ஆள் சதாசிவமும் சம்பந்தப்பட்டிருக்கான். மத்தியானம் செத்தானே, அவனும் சம்பந்தப்பட்டிருக்கான்.''

''சிலேயா?''

''ம்... சாயங்காலம் அந்த ஆளைச் சந்திச்சபோது அவன் கையில ஒரு பொட்டலத்தைப் பார்த்தோம். அது என்னன்னு தெரிஞ்சுக்கறதுக்குத்தான் வியாபாரம் பண்ற மாதிரி பேசினோம். ஏதோ பத்து நாப்பத்தஞ்சுன்னு பேசினான். என்னன்னு புரியலே. பொட்டலத்தைப் பிரிக்க மாட்டேன்னுட்டான். அதுக்குத்தான் பொட்டலத்தில என்ன இருக்குன்னுட்டு நைஸா தெரிஞ்சுட்டு வான்னு வஸந்தை அனுப்பினேன். அவன் அந்த வீட்டில போய்ப் பார்த்ததில சதாசிவம் அடிபட்டுக் கிடந்தான். இது தான் நடந்த விஷயம்.''

இன்ஸ்பெக்டர் சிந்தனை வசமாகி ''ஹூம்' என்றார்.

''உங்க எஃப். ஐ. ஆர். புக், கேஸ் டயரி, ஸ்டேஷன் ஹவுஸ் டைரி எல்லாத்தையும் பார்த்து எனக்கு ஒரு தகவல் சொல்ல முடியுமா?'' என்றான் கணேஷ்.

''என்ன வேணும்?'' இருவரையும் பற்றிய அவர் மனநிலை இப்போது நிச்சயம் மாறி இருந்தது.

''சமீபத்தில் கொஞ்சம் வித்தியாசமான கேஸ் ஏதாவது ரிப்போர்ட் ஆகியிருக்கா?''

''வித்தியாசமான்னு?''

''சாதாரணமா நிலச் சண்டை, தெருச் சண்டை இப்படி யெல்லாம் இல்லாம வெளியூர்க்காரங்க இந்த ஊருக்கு வந்து ஏதாவது காணமப் போயிட்டதாகவோ, தொலைச்சுட்டதாகவோ அல்லது ஏமாந்திட்டதாகவோ ரிப்போர்ட் இருக்கா?''

''கொஞ்சம் இருங்க பார்த்துச் சொல்றேன்.'' என்றார்.

அவர் ரிஜிஸ்தரை எடுத்து மேஜை மேல் வைத்துப் புரட்ட கணேஷை ''நீங்களும் பாருங்களேன்'' என்றார். வஸந்த் கணேஷின் நேர்முகமான அணுகல் முறையை வியந்தான். இன்ஸ்பெக்டருக்கு அவர்கள் மேல் இருந்த சந்தேகம் நிச்சயம் விலகியிருக்க வேண்டும்.

''லெட்மீ சீ... இது என்ன ஸார் கேஸ¬?''

''அது ஒண்ணும் இல்லீங்க. வழிப்பறி. இந்த ஆள் பஸ் ஸ்டாண்டில நின்னுக்கிட்டு இருந்திருக்கான். திடீர்னு ஒரு ஆள் வந்து கையில் இருந்த பெட்டியைப் புடுங்கிக்கிட்டு போய்ட்டான். பெட்டியில தானே தயாரிச்ச தைலம் சாம்பிள்களும் கொஞ்சம் பணமும் வெச்சிருக்கான். நல்ல வேளே





மொத்தப் பணத்தையும் அதில வெக்கலே. தனியா வச்சிக்கிட்டிருந்திருக்கான்...''

''இந்த ஆளோட ஒரிஜினல் புகார் கடிதம் இருக்கா?''

''இருக்கு. பாக்கறீங்களா?''

ரிஜிஸ்டருடன் பின் குத்தி வைக்கப்பட்டிருந்த காகிதத்தை எடுத்துக் காட்டினார்.

''கொலைக் கேஸைக் கண்டு பிடிக்க வாய்ப்பு இருக்குங்கறீங்க?''

''இருக்குங்க... நீங்க விசாரித்ததில ஒண்ணும் தெரியலேயா?''

''இல்லேங்க!''

கணேஷ் அந்தக் கடிதத்தைப் பார்த்தான். ''நான் ஒரு விற்பனையாளன், தயாரிப்பாளன். என் தைல சாம்பிள்களை எடுத்துக் கொண்டு ஊர் ஊராகச் சென்று விற்பவன். என் பெயர் காளிதாஸ். என் விலாசம்— தஞ்சாவூர் விலாசம் கொடுத்திருந்தான் — நேற்று அதாவது 17–12–80 அன்று நான் பேருந்து நிலையத்தில் நின்று கொண்டிருந்த போது ஒரு இளைஞன் என்னை அணுகி மணி கேட்டான். சொன்னேன். தஞ்சாவூர்க் காரரா என்று கேட்டான். ஆம் என்றேன். ஸாம்பிள் கொண்டு வந்திருக்கிறீயா என்றான். நான் என் தைல ஸாம்பிள்கள் என்று எண்ணிக் கொண்டு ஆம் என்றேன். அவன் அதற்கு மேல் கேட்டது எனக்குத் தெளிவாக விளங்குவதில்லை... பத்துக்கு நாற்பது என்று சொன்னதாக நினைவு. இதனிடையில் பேருந்து வந்துவிடவே நான் அதில் ஏறிக்கொள்ளப் போகும் சமயத்தில் 'என்ன சொல்லாமப் போறீங்களே' என்று உடன்வந்து தொந்தரவு செய்ய, நான் போப்பா என்றேன். அப்போது திடீரென்று என் கைப் பெட்டியைப் பிடுங்கிக் கொண்டு ஓடிவிட்டான். அதற்குள் பேருந்து புறப்பட்டுவிட, நான் அதை நிறுத்தி இறங்கிக் கொள்வதற்குள் அவன் கூட்டத்தில் மறைந்துவிட்டான். பெட்டியில் என் தைல சாம்பிள்களும் ரூபாய் நூறு பணமும் இருக்கிறது. அவன் கரிய நிறத்தில் கால் சராயும் நீல நிறத்தில் சட்டையும் அணிந்திருந்தான். இளம் வயதினன். அவனுக்குச் சுமார் இருபது வயதிருக்கலாம். ஒப்பம்.....''

''அப்புறம் இந்தக் கேஸ் என்ன ஆச்சு?''

''கண்டு பிடிச்சுட்டேன்.''

''யாரை? திருடனையா?''

''இல்லே. அந்தப் பெட்டியை. தெருவில் கிடந்ததுன்னு ஒரு ஆள் ஸ்டேஷன்ல கொண்டாந்து கொடுத்தான். திருட்டுப் போன சாயங்காலமே கிடைச்சுடுச்சு.''

''அப்படியா? அதில்இருந்த பொருள்கள்?''

''ஒண்ணு குறையலே. தைல பாட்டில், பணம் எல்லாம் அப்படியே இருந்தது.''

''அந்தப் பெட்டியைத் திருப்பிக் கொண்டு வந்து கொடுத்தானே அந்த ஆள் விலாசம் இருக்குமா?''

''இருங்க பார்க்கறேன்.''

''தைல வியாபாரி என்ன ஆனான்?''

''சந்தோஷமா பெட்டியை வாங்கிட்டு சாயங்கால பஸ்ஸிலே போயிட்டான். உங்களுக்குத் திருப்பிக் கொண்டாந்து கொடுத்தவன் விலாசம்தானே வேணும்?''

''ஆமா.''

''இருக்கு! நரேன். நம்ம ரிக்கார்ட்ஸ் எல்லாம் அப்பழுக்கில்லாதது. ராஜேந்திரன் கேட்டா சொல்லுங்க.''

''அதுக்கென்ன தாராளமா! என்ன பாஸ் இந்த அட்ரஸ் நமக்கு வேணுமா?''

''குறிச்சு வெச்சுக்க வஸந்த்.''

வஸந்த் குறிப்பெடுத்துக்கொள்ள, ''அப்ப நீங்க போகலாம். ஏதாவது தகவல் வேணுமின்னு சொல்லி அனுப்பறேன். உங்களுக்கும் ஏதாவது நம்ம டிபார்ட்மெண்ட் கிட்ட இருந்து உதவி வேணும்னு....''

''வேணுங்க.''

''என்ன சொல்லுங்க.''

''நாளைக்கு அந்த சதாசிவம் வீட்டை ஸர்ச் பண்ண என்னை அனுமதிக்கணும். அப்புறம்....''

''அப்புறம்?''

''வஸந்தை நீங்க அரஸ்ட் பண்ணணும்!''

(தொடரும்)

---

## வம்பன் வெங்கு

செய்தி : நேதாஜி மனைவிக்கு உதவியில்லை..

வெங்கு: மாதாஜியின் கருணை நேதாஜி மனைவி மீது இல்லையோ?

நெடுஞ்செழியன் : நாயுடு கூறுவதை விவசாயிகள் கேட்டால் நாடு சீரழியும்.

வெங்கு: நெடுஞ்செழியன் கூறுவதை விவசாயிகள் கேட்டால் நாயுடு சீர்குலைவார்.

செய்தி : 'மிக்' விமானம் இந்தியாவில் தயாரிக்க முயற்சி.

வெங்கு: முயற்சி வெறும் 'காமிக்'காக முடியாமல் இருந்தால் சரி.

செய்தி : ராஜ்ய சபை ஒரு மணி நேரம் ஸ்தம்பித்தது.

வெங்கு: இது என்ன பிரமாதம். நாட்டு முன்னேற்றம் பல வருடங்களாக ஸ்தம்பித்து நிற்கிறதே....

செய்தி : ரூ 1 லட்சம் சாராய ஊறல் சிக்கியது.

வெங்கு: இதில் ஏதாவது ஊழல் சிக்குமா என எதிர்க் கட்சிகள் ஆராயலாம்.

செய்தி : தமிழக வறட்சியைக் காண டெல்லியிலிருந்து ஒரு குழு வருகிறது.

வெங்கு: குழுவினருக்கு அனைத்து வசதிகளும் அளிப்பதில் வறட்சி இராது!

ஜனாதிபதி : ரூ 1000க்கு மேல் சம்பளம் பெறுவோர் ஸ்டிரைக் செய்யக் கூடாது.

வெங்கு: ரொம்ப தேங்க்ஸ். மற்றவர்கள் 'ஸ்டிரைக்' செய்யலாம் என அனுமதி கொடுத்த ஜனாதிபதிக்கு டபுள் தாங்க்ஸ்....



செய்தி : எம். எல். ஏக்கள் சிலர் திரைப் படத்தில் நடிப்பர்.

வெங்கு: படத்தில் நடிப்பதற்கு முன் அனுபவம் நிறையக் கிடைத்திருக்குமே!

**தமிழக அரசின் சரிந்துவரும் வருவாயைச் சரிக்கட்ட மதுவிலக்கை ரத்து செய்ய வேண்டுமென ஆளும் கட்சியிலேயே பலர் வற்புறுத்தி வருகின்றனர். இது விஷயமாக காந்திய வாதியும், கள்ளுக்கடை மறியலில் ஈடுபட்டுச் சிறைக்குச் சென்றவரும் மேலவைத் தலைவருமான ம. பொ. சி. அவர்களைப் பேட்டி கண்டபோது...**

**மது குடிப்பதைத் தடுப்பது என்பது தனிநபர் சுதந்திரத்தில் தலையிடுவது போல ஆகாதா?**

''இந்தக் கருத்தை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். தற்கொலை செய்துகொள்வதைக்கூட தவறு என்று கூறுகிறது நம் சட்டம். அப்படியிருக்க, மதுவைக் குடித்து, கொஞ்சம் கொஞ்சமாகத் தினமும் செத்துக் கொண்டிருப்பதைத் தற்கொலைக்குத்தான் ஒப்பிட வேண்டும். இது நிச்சயமாகத் தனி நபர் சுதந்திரத்தில் தலையிடுவதாக ஆகாது. தனி மனிதனின் கூட்டுத் தொகைதான் சமூகம். அப்படியிருக்க, மதுவிலக்கை ரத்து செய்து, குடிக்க அனுமதித்து விட்டால் இந்தச் சமூகமே அவல நிலைக்கு ஆளாகி விடாதா? அப்புறம் நமக்குக் கொடுமைகளும் துயரங்களுமே சொந்தமாகிவிடும்.''

**தமிழ் நாட்டைச் சுற்றியிருக்கும் எல்லா மாநிலங்களும் மதுவிலக்கை ரத்து செய்துவிட்டு வருமானத்தைப் பெருக்கிக் கொண்டிருக்கும்போது, நம் மாநிலம் மட்டும் மதுவிலக்கை அமுல்படுத்தி, வருமானத்தை இழந்து கொண்டு இருப்பதில் என்ன நியாயம் இருக்கிறது?**

''முதலாவதாக மதுவிலக்கை அமுல் நடத்தும் பொறுப்போ, ரத்து செய்யும் பொறுப்போ எந்த மாநிலத்தின் கையிலும் இருக்கக் கூடாது. மத்திய அரசே பொறுப்பேற்று நடத்த வேண்டும். தேசம் முழுவதையும் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் கொள்ள மத்திய அரசால் முடியும். மதுவிலக்கை ரத்து செய்வதால் வரும் வருமானத்தை வேறு வழிகளில் பெற்றுக்கொள்ளலாம். உதாரணமாக சுங்க வரி மற்றும் விற்பனை வரியை அதிகப்படுத்தலாம். உண்மையிலேயே மத்திய அரசுக்கு காந்திஜியின் கொள்கைகளில் நம்பிக்கை இருந்தால் அவைகளை அமுல்படுத்துவதில் தீவிரமும் இருந்தால் ஒரு குறிப்பிட்ட தேதியைக் குறியீடாக வைத்துக் கொண்டு அதற்குள் மாநில அரசுகள் மதுவிலக்கை அமுல்படுத்த வேண்டும் என்று எச்சரிக்கை விட வேண்டும். அதைச் செய்ய மாநிலங்கள் தவறினால் மத்திய அரசு தலையிட்டு சட்டங்களின் மாற்றங்களினால் அமுல் படுத்தலாம்.

மாநில ஆட்சியில் மத்திய அரசு தலையிடக் கூடாது என்ற கொள்கையுடைய நான்கூட இந்த விஷயத்தில் மத்திய அரசு தலையிட வேண்டும் என்று வற்புறுத்துகிறேன் என்றால் மதுவின் தீமைகளை ஒழிக்க வேறு வழியில்லை என்று உணர்ந்ததினால்தான்.

நமது முதல்வர் அண்டை மாநில முதல்வர்களிடம் பேசும்போது எல்லைப்புறத்தில் பத்து மைல் சுற்றளவுக்கு மதுக்கடைகள் வைக்க வேண்டாம் என்று கேட்டுக் கொண்டதற்கு அதைச் செய்ய முடியாது என்று அவர்கள் கூறிவிட்டார்கள். மற்ற மாநிலங்களின் போக்கு இப்படி இருக்க, நமது மாநிலம் மட்டும் என்ன செய்ய முடியும்? அதனால்தான் சொல்கிறேன், மதுவிலக்கை அமுல் நடத்த வேண்டியது மத்திய அரசின் பொறுப்பு என்று.

**மதுவிலக்கை ரத்து செய்தால் அதன் மூலம் கிடைக்கும் வருமானத்தால் துண்டுவிழும் பட்ஜெட்டைச் சரிக்கட்டலாமே? நிறையத் திட்டங்களும் தீட்டலாமே?**

மதுவிலக்கை ரத்து செய்து அதனால் வரும் வருமானத்தில்தான் அரசு துண்டு விழாத பட்ஜெட்டும் திட்டங்களும் தீட்ட வேண்

# வேண்டாம் மதுவிலக்கில் தடுமாற்றம்!





அருள்வாக்கு

## ஞானபாதம்

● சிவாகமம், வைகானச பாஞ்சராத்ர ஆகமங்கள் தேவி தந்த்ரம் இவை எல்லாவற்றிலும் நான்கு பாதங்கள் உள்ளன. முறையே சரியா பாதம், க்ரியா பாதம், யோக பாதம், ஞான பாதம் என்பவை.

சரியை என்பது நித்ய ஒழுக்க ஆசாரங்களுக்கு வேண்டியதைச் சொல்பவை.

க்ரியா பாதம் செய்ய வேண்டிய பூஜை முதலியவைகளைச் சொல்லுபவை. அதில் ஆத்மார்த்த பூஜை, பரார்த்த பூஜை இவை அடங்கும்.

யோக பாதத்தில் எல்லாவற்றையும் விட கடுமையாக மனத்தை அடக்கி நிலைநிறுத்தி அதை ஈசனிடம் கொண்டு சேர்க்க வேண்டிய பிராணயாமம், தியானம், நிஷ்டை முதலிய முறை உபதேசிக்கப்பட்டுள்ளது.

மனத்தை வெற்றி கொண்டவன் உலகத்தை வெற்றி கொள்வான். அதைச் சாதிக்காதவன் வீணே வாழ்கிறான். அந்த வெற்றிக்கு உதவுவது நான்காவதான ஞான பாதம்.

எப்பொருளிலும் நின்றவன் ஈசனே. அந்தத் தத்துவத்தை ஆகமங்கள் மூலம் விளக்குவது ஞான பாதம். ஒவ்வொரு அணுவிலும் அணுவாய் இருப்பவன் ஈசன் என்று நாம் கதையைக் கேட்டிருக்கிறோம். ஈசனைத் தவிர வேறு ஒரு பொருள் இல்லை என்ற அனுபவம் வந்துவிட்டால் ஆசைக்கு இடமில்லை. கோபத்துக்கு இடமில்லை, பாபத்துக்கு உணர்வில்லை. பழிக்கு உணர்வில்லை. விழித்துக் கொண்டிருக்கும்போதும் கனவு காணும் போதும் எப்பொருளை உணர்ந்தாலும் அவையெல்லாம் ஈசனே என்ற சந்தேகமற்ற நிலையே ஞான நிலை. அதுவே வீடு. அதுவே பேறு. அதை விளக்கும் பகுதியே எல்லா ஆகமங்களிலும் உள்ள ஞானபாதம்.

பாரத ராமாயணங்களிலும் இவ்விஷயம் கூறப்படுகிறது. ஆனால் சரியை என்னும் ஒழுக்க முறை முக்கியமாக வற்புறுத்தப் படுகிறது.

— ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்

டும் என்ற நிலை ஏற்படுமானால் நான் துணிந்தே கூறுகிறேன். அந்தத் திட்டங்களும் வேண்டாம். அரசும் வேண்டாம். ஏராளமான குடும்பங்களைக் குடியின் கொடுமையில் தவிக்க விட்டு அதனால் வரும் வருமானத்தை அரசின் திட்டங்களுக்குச் செலவிடுமேயானால் அதைவிட இழிவு வேறொன்றுமில்லை.''

**மதுவிலக்கை அமுல்படுத்திக்கொண்டு இருப்பதால் மேல்நாட்டுப் பயணிகள் பலர் தமிழ் நாட்டுக்கு வருவதில்லையாமே? ரத்து செய்தால் நிறையப் பயணிகள் வருவார்கள் இல்லையா?**

''இதுவும் தவறான கருத்து. நானே பல மேல் நாட்டுப் பயணிகளிடம் இது பற்றிப் பேசியிருக்கிறேன். இந்த விஷயம் ஒன்றும் எங்களைப் பாதிக்கவில்லை என்று அவர்கள் கூறியிருக்கிறார்கள். மேலும் பெரிய ஓட்டல்களில் மேல் நாட்டுப் பயணிகளுக்கு குடிக்க அனுமதி வழங்கியிருக்கிறார்களே!''

**மதுவிலக்கை ரத்து செய்தால் கள்ளச்சாராயத்தை ஒழித்து விடலாமே?**

''இதுவும் தவறான கருத்துத்தான். மதுவிலக்கை ரத்து செய்தால் கூடக் கள்ளச் சாராயம் இருந்து கொண்டுதான் இருக்கும். அதைக் குடித்துப் பழகிப் போனவர்கள் அதைத்தான் நாடுவார்கள். இந்தக் கள்ளச் சாராயத்தை ஒழிப்பதற்கு நமது போலீஸ் துறை கடுமையான நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். கள்ளச் சாராய வியாபாரிகளிடம் லஞ்சம் வாங்கும் போலீஸ் அதிகாரிகளுக்குக் கடுமையான தண்டனை வழங்க வேண்டும்.''

**மதுவிலக்கை தமிழகஅரசு ரத்து செய்தால் உங்கள் நிலை என்ன?**

''நான் முதலிலேயே கூறியபடி மது விலக்கை ரத்து செய்ய வேண்டிய துர்பாக்கிய நிலை தமிழகத்தில் ஏற்பட்டால் அதற்கு முழுக் காரணமும் மத்திய அரசுதான். மேலும் மதுவிலக்கை ரத்து செய்த நாளிலிருந்து இடையில் இரண்டாண்டுகள் தவிர இதுநாள்வரை மதுவிலக்கினால் ஏற்பட்ட நன்மைகளை யாரும் புள்ளி விவரம் எடுத்துப் பார்க்கவில்லை. பத்திரிகைகள் படிக்கும் பழக்கம், சேமிக்கும் பழக்கம் வளர்ந்திருக்கிறது. எந்த ஒரு திட்டத்தையும் அமுல் படுத்தினால் அதனால் தொடர்ந்து வரும் நன்மை தீமைகளை நாம் கணக்கெடுத்துப் பார்க்க வேண்டும். மதுவிலக்கு ரத்துசெய்த விஷயத்தில் இதை நாம் செய்யவில்லை. நம் நாட்டில் ஒவ்வொரு மதத்திலும் பல வேறு மடாதிபதிகள் இருக்கிறார்கள். அவர்கள் சொல்படி கேட்பதற்கு மக்களும் இருக்கிறார்கள். அவர்கள் மூலம் மது விலக்கை ஆதரித்து தீவிர பிரசாரம் செய்ய வேண்டும்.

என்னைப் பொறுத்தவரையில் மதுவிலக்கை ரத்து செய்தால் என் கண்கள் மட்டுமல்ல; உடம்பே ரத்தக் கண்ணீர் வடிக்கும். இதற்கு மேல் எதுவும் கூறினால் அது அரசியலாகிவிடும்.''

பேட்டி : மஞ்சுபாரதிப்ரியன்

# ISI தர முத்திரை பெற்றது
# விநிபா சந்தன முகப்பவுடர்

IS 3959



CM/L/8273

விநிபா சந்தன முகப்பவுடர்
தரமாகத் தயாரிக்கப்படு கின்றது. சான்றாக இப்போது
ISI-யின் தரமுத்திரை பெறுகின்றது.
சருமத்திற்கு மென்மையும்,
பொலிவும் அளிக்கவல்ல தூய
100% மைக்ரோஃபைன்
செய்யப்பட்ட மைசூர் சந்தனம்,
இந்தியாவின் அபூர்வ மூலிகைகள்,
மேனாட்டு வாசனை திரவியங்கள்,
உயர்ந்த அத்தர் வகைகள், தூய
புனுகு, ஜவ்வாது, அரகஜா
இவற்றை ஒருங்கே கலந்து நவீன
விஞ்ஞான ரீதியில்
தயாரிக்கப்படும் நறுமணம்
கமழும் பவுடர் விநிபா.












Criterion VP 3668 TMB

விநிபா ப்ராடக்ட்ஸ்
"கோகுல் கார்டன்ஸ்," கும்பகோணம்.

பெரியம்மாவின் கண்கள் பரபரப்பாக ஆராய்ந்து கொண்டிருந்தன. தங்கள் பெண்ணுக்கு ஹார்ஷனை முடிவு செய்தபொழுது ஒரு தடவைதான் இந்த வீட்டுக்கு அவள் வந்திருந்தாள்.'

'கடல் போல் எத்தனை பெரிய வீடு... சமாளிக்க ஜயந்தி கஷ்டப்படுவாள், இந்தக் காலத்து விலைக்கு ரொம்பப் பெரிய தொகை கிடைக்கும். ஒரு சின்ன பங்களா வாங்கி விட்டு மீதியை பாங்கில் கட்டி வைத்துவிடலாம்...' கற்பனையில் அந்த வீட்டை விலை பேசி முடித்து விட்டிருந்தாள்.

அந்தக் கடல் போன்ற வீட்டின் யஜமானியாக இருக்க வேண்டிய பாக்கியத்தை வேலைக்காரி நிலையிலிருந்த மாதங்கி தட்டிக் கொண்டு போய்விட்டதை கமலியால் இன்னமும் ஏற்கவே முடியவில்லை.

வரவேற்பறையில் காலுக்கடியில் மெத்தென்று மிதிபட்ட பாரசீகக் கம்பளத்தைப் பொறுமையுடன் பார்த்தாள்.

சாப்பாட்டறையைப் பிரித்துத் தடுத்துக் கொண்டு நின்ற டிவைடரில் வசதியான உயரத்தில் திணிக்கப்பட்டிருந்த டி. வி. ரேடியோகிராம், டேப் ரிகார்டர் எல்லாவற்றையும் உற்றுப் பார்த்தாள்.

சந்தன மரத்தால் ஆன கணேசர் மேல் படியில் கொலு வீற்றிருந்தார். அடுத்த படியாக தந்தத்திலான கீதோபதேசக் கண்ணன். அவருக்கடுத்த பீடத்தில் சலவைக் கல்லில் பளபளத்த புத்தபிரான். உச்சியில் யானைத் தந்தங்களில் தொங்கிய ஊஞ்சலில் குழலூதிய வெள்ளிக் கிருஷ்ணன். அவனது இரு பக்கத்திலும் தங்கமாக மின்னிய திருச்சூர் குத்து விளக்குகள்.... கண்ணாடி அலமாரியில் பொன் எழுத்துக்களைத் தாங்கியபடி வரிசையாகத் தடிமனான பல புத்தகங்கள்... காப்பி மேஜை மீது கிரிஸ்டல் கிளாஸ் பூந்தொட்டியில் தோட்டத்து ரோஜாப் பூக்கள்... எதிர்ப்புற சுவரில் பத்திக் வேலைப்பாட்டில் நடராசர்... என்று ஒவ்வொன்றையும் ஊன்றிப் பார்த்தவள் மனம் குபகுபவென்று பற்றி எரிந்தது.

'இந்தப் பெண் ஜயந்தி...இப்படி ஒரு காரியத்தைச் செய்வாளா...' தனக்குள்ளே குமுறியபடி மெல்ல உள்ளே வந்து உட்கார்ந்தாள்.

''முதல்லே காப்பி டிபன் சாப்பிடுங்கோ... அத்தை எழுந்திருக்கிற நேரம்தான் ...'' சொல்லிக் கொண்டே முகம் தெரிந்த சன்மைக்கா இழைத்த சாப்பாட்டு மேஜை மீது தட்டுகளையும் காப்பி கெட்டிலையும் கொண்டு வந்து மாதங்கி வைத்தாள்.

தட்டிலிருந்த பாதாம் கேக்கையும் காராப் பூந்தியையும் பார்த்த தயானந்த் சட்டென்று கையைத் துடைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டார்.

காப்பி டிபன் என்றால் போதும். அவர் எந்த இடத்திலும் எந்தச் சமயத்திலும் மறுக்க மாட்டார்.

கணவனை எரிச்சலுடன் பார்த்து விட்டு மெள்ள எழுந்து குளியலறைக்குள் புகுந்து கையைக் கழுவிக் கொண்டு வந்தாள் கமலி.

''நானே தயார் செய்தவை. அத்தை பாதாம் கேக் செய்யும் பக்குவத்தைச் சொல்லிக் கொடுத்தாங்க...'' முறுவலித்துக் கொண்டே அருகில் வந்து நின்ற மாதங்கியைப் பார்த்து அவள் மனம் பற்றி எரிந்தது.

கல்யாணத்துக்கு முன் எப்படி இருந்த பெண்?....

ஜயந்தி கழற்றிப் போட்ட கிழிந்த புடவைகளைச் சிராக்கி உடுத்திக் கொண்டு கூப்பிட்ட குரலுக்கு நாயாக ஓடி உழைத்துக்கொண்டிருந்தவளுக்கு இப்படி ஒரு யோகமா? கைகளிலும் கழுத்திலும் தங்கம் மின்ன காதில் வைரம் டாலடிக்க, இடையில் பட்டுச் சேலையும், முகத்தில் பணக்காரக் களையு மாக.... ஆளே மாறிப் போய் விட்டிருக்கிறளே?




வீட்டுக்குள் வரும் போதே கமலி கவனித்து விட்டிருந்தாள். தோட்டத்துக்கு நீர் பாய்ச்சிக்கொண்டிருந்த ஆள் ஹோஸ் பைப்பை வைத்துவிட்டு பாதி திறந்த நிலையிலிருந்த கராஜின் இழுப்புக் கதவை கீழே தள்ளி மூடிப் பூட்டினான்.

கராஜில் இரண்டு கார்கள் நிற்பதை... சட்டென்று அந்த அவசரத்திலும் பார்த்து விட்டாள்.

பத்துக் கிலோ அரிசியையும் மற்ற வீட்டுச் சாமான்களையும் அட்டைப் பெட்டிக்குள் வைத்து அதை இடுப்பில் தூக்கிக்கொண்டு ரிக்ஷாவுக்குக் கொடுக்கக் கையில் காசில்லா

மல் மூச்சிறைக்க வெய்யிலில் மளிகைக் கடையிலிருந்து வீட்டுக்கு நடந்து வருவானே அந்த மாதங்கிக்கு இப்போ உல்லாசமாகப் போய் வர இரண்டு கார்கள்!...

இந்தப் பாவிப் பெண் ஜயந்தி தனக்கு, வரவிருந்த அதிர்ஷ்டத்தை புரிந்துகொள்ளாமல், காதல் கத்தரிக்காய் என்று.... மேலே சிந்திக்க முடியாது... அவனுக்குப் புரை ஏறிக் கொண்டு விட்டது.

''காராப்பூந்தியில் ரொம்பக் காரம் போட்டிருக்கே...'' இருமிக் காண்டு தலையைப் பலமாகத் தட்டிக் கொண்டான் சுமதி.




''கொஞ்சம் தண்ணி சாப்பிடுங்கோ—சரியாயிடும்... அக்கா ஜயந்தி உங்களை நினைக்கிறப் போலிருக்கு...'' மாதங்கி வேடிக்கையாகப் பேசிய வண்ணம் தண்ணீர் டம்ளரை அருகில் நகர்த்தி வைத்தாள்.

மகளின் நினைப்பு சுமதியின் நெஞ்சில் நெருப்பைத்தான் கொட்டியது.

சென்னைக்கு ஓடோடி வந்த தயானந்த் தமது மகளை வலை போட்டுத் தேடத் தொடங்கினார்.

அவர்கள் வசித்தது நெருக்கமாக வீடுகள் நிறைந்ததொரு குடியிருப்புப் பகுதி. எத்தனை முயன்றும் அதற்குள் எப்படியோ விஷயம் காட்டுத் தீயாகப் பரவி விட்டிருந்தது. ஒருசில தினங்கள் தலையை வெளியே நீட்ட அஞ்சி சுமதி வீட்டுக்குள்ளேயே முடங்கிக் கிடந்தான்.

பல நாட்களுக்குப் பின்னர் அவர்களுக்கு ஒரு கடிதம் வந்தது. மகள் ஜயந்திதான் எழுதியிருந்தாள்.

தனது நெடுநாளைய நண்பன் ரமேஷை அவள் கல்யாணம் செய்து கொண்டு மாமனார் மாமியாருடன் அருகில் கோடம்பாக்கத்தில்தான் வசிப்பதாகவும் எல்லாவற்றையும் மறந்து அவர்கள் இருவரும் அவசியம் அவள் புக்ககத்துக்கு ஒரு நடை வந்து போக வேண்டும் என்றும் எழுதியிருந்தாள் — முகவரியையும் கொடுத்திருந்தாள்.

தயானந்தும் சுமதியும் ஆத்திரத்தில் ஆடிப் போய்விட்டனர். ஆனாலும் பெற்ற மனம் பித்தாகி மகளைப் பார்க்க வேண்டும் என்று துடிக்கத் தொடங்கவே... வெட்கத்தை உதறி விட்டு மகளைக் காணப் புறப்பட்டனர்.

கோடம்பாக்கத்திலே இருந்த அந்தக் குறுகிய சந்துக்குள் நுழைந்தபோதுதான் சுமதி திடுக்கிட்டுப் போனான்.

பங்களாவும் காருமாக வசதியான வாழ்க்கையைத் தேடிக் கொடுக்க அவர்கள் முயன்றதை உதறிவிட்டு...ஜயந்தி...ஐந்து குடித்தனக் காரர்களிடையே ஒண்டுக் குடித்தனவாசியாக... வீட்டின் ஒரு சிறு பகுதியில் வசித்துக் கொண்டிருந்ததைக் காண அம்மாவுக்கு ஓவென்று அழவேண்டும் போன்று ஆத்திரமாகத்தான் இருந்தது. எலும்பும் தோலுமாக இருந்த மாமியார் ஆஸ்துமா நோயாளி. படுக்கையில் கிடந்தாள். சர்க்கரை வியாதிக்கார மாமனார் கொல் கொல்லென்று இருமிய படி வாசல் பக்கத்தில் உட்கார்ந்துஇருந்தார்.

ஜயந்தியின் கணவன் நகரத்து அலுவலகம் ஒன்றில் வேலை பார்த்துக் கொண்டிருந்தான். குறைந்த சம்பளம். கஷ்ட ஜீவனம்.

அவள் போனபோது துடைப்பமும் கையுமாக வீட்டைப் பெருக்கிக் கொண்டு நின்ற மகளைப் பார்த்தபோது அவளுக்கு அழுகையே வந்து விட்டது.

தளதளவென்று தங்க விக்கிரகமாக நின்ற அவளது செல்வ மகள் அந்தச் சில நாட்களில் ஒட்டி உலர்ந்து, கருத்து இளைத்து எப்படி மாறிவிட்டிருந்தாள்?

'அடிப் பாவிப் பெண்ணே... உன் காதல் நாசமாப் போக....' — மனதுக்குள்ளே சபித்தபடி பெற்றவள் மகளைக் கட்டிக் கொண்டு கண்ணீர் உகுத்தாள். இனிமேல் என்ன செய்ய முடியும்?' ''வீட்டுக்கு வந்து கொண்டு இரு...'' சுருக்கமாகச் சொல்லி விட்டு விரைவில் விடை பெற்றுக் கொண்டு கிளம்பி விட்டாள்.

அதற்குப் பின் பல நாட்கள் சுமதி உறங்கவே இல்லை. மகளை நினைத்து நினைத்து அழுதழுது சோர்ந்து போனாள். பின்னர் தன்னைத் தானே சமாதானப்படுத்திக் கொண்டாள்.

மகள் இறந்துபோயிருந்தால் கூடவா செத்துவிட்டிருப்பாள்? கல்யாணம் பண்ணிக்கொண்டு தொலைந்து விட்டாள். ஒழியட்டும் என்று மனக் கவலைகளை அழித்துவிட்டு நிமிரத் தொடங்கியிருந்தாள்.

அது சமயந்தான் சம்பந்தி கஸ்தூரியின் உடல் நிலையைப் பற்றிக் கேள்விப்பட்டாள்.

அனுதாபம் காட்டி உதவி செய்ய வந்து விடவில்லை.

காதல் என்று சொல்லி மகள் ஜயந்தி தன் வாழ்வைத் தானே அழித்துக்கொண்டு விட்டாள்.

காதல் இல்லாது கட்டாயப்படுத்திச் செய்து வைத்த மாதங்கியின் கல்யாணம் எந்த நிலையில் இருக்கிறது என்று வம்பு விசாரிக்கத்தான் புறப்பட்டு வந்திருந்தாள் பெரியம்மா சுமதி.

முன்னைவிடச் சதைப்பிடிப்புடன், செல்வச் செழிப்புடன்,வீட்டின் யஜமானியாக உயர்ந்த நிலையிலிருந்த மாதங்கியைக் காண அவளுக்குப் பொறுமையாகத்தான் இருந்தது.

''ஜயந்தி அக்கா சுகமா பெரியம்மா?'' கேட்டதும் நினைவினின்றும் விழித்துக் கொண்டாள் சுமதி.

''மனம் போல மாங்கல்யம் அவளுக்கு அமைஞ்சுடுத்து. சுகமாகத்தான் இருக்கா... மாமியார் ரொம்பத் தங்கமானவங்க. அவளை ஒரு வேலைகூடச் செய்ய விடறதில்லே. அவளுக்கு ஒரு குறையுமில்லே. ஜம்முன்னு இருக்கா... ஆமாம்... இங்கே வந்தும் நீ இன்னமும் வீட்டு வேலைகளைச் செய்து கொண்டு இருக்கிறதைப் பார்க்க மனதுக்குக் கஷ்டமாக இருக்கு. எங்க கிட்ட இருக்கும் போது உனக்கு வீட்டு வேலைகள் தெரிஞ்சிருக்கட்டும்னு அதிகப்படியா பயிற்சி கொடுத்தேன். உன் மாமியார் கிட்டக் கூட முதல் முறை நம் வீட்டுக்கு வந்திருந்தபோது உன்னைப் பத்திச் சொன்னேன். அதுக்காக இப்படியா வேலை வாங்கறது? பணம் காசிலே உன் மாமியார் கை அத்தனை தாராளமில்லேன்னு கேள்வி... அப்படித்தானே?''

''அப்படி யெல்லாம் ஒண்ணும் இல்லே பெரியம்மா. என்னை ரொம்ப நல்லாக் கவனிச்சுக்கிறாங்க.. வீட்டு வேலைக்குக் கூட மாட ஒத்தாசைக்கு ஆள் வைச்சிருக்காங்க. அத்தைக்கு உடம்பு முடியாம இருக்கிறதாலே நானே எல்லாத்தையும் கவனிக்கப் பிரியப்படறேன். அவ்வளவுதான்.'' சட்டென்று மாதங்கி பதிலளித்தாள்.

''ரத்த அழுத்தம் ரொம்பப் பொல்லாத வியாதியாச்சே.. நல்லா அவங்களைக் கவனிச்சுக்கோ... நீ வந்த வேளை அம்மா மண்டையைப் போட்டுட்டாங்கன்னு ஹர்ஷன் உன்னைப் பத்தித் தப்பா எண்ணும்படி எதுவும் நடந்துடக் கூடாது...''

''ரத்த அழுத்தம் இறங்கிச் சரியாயிட்டது. இனிக் கவலை இல்லேன்னு டாக்டர் சொல்லியிருக்கார் பெரியம்மா.'' பொங்கி வந்த கோபத்தை அடக்கிக் கொண்டு மெல்லப் பேசினாள் மாதங்கி.

''அப்படித்தான் எதிர் வீட்டுத் தாரணிக்குச் சொன்னார் டாக்டர். இப்ப என்ன நடந்தது? போன வாரம் தண்ணி குடிக்க எழுந்தவ அப்படியே மயங்கிக் கீழே விழுந்தா... அப்படியே போயிட்டா...''

'இந்தப் பெரியம்மா வாயிலே நல்லதே வராதா?' உள்ளூர வெகுண்டாள் மாதங்கி. என்ன இருந்தாலும் ஆதரவற்ற நிலையிலிருந்தபோது சோறு போட்டு வளர்த்தவங்க... சூடாக ஏதும் பேசக் கூடாது.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''பத்து நாளா இந்த இருமலுக்கு உங்ககிட்டே வைத்தியத்துக்கு வந்து கிட்டிருக்கேனே டாக்டர், இன்னும் எத்தனை நாள் வரவேண்டியிருக்கும்!''

''அடுத்த பேஷண்ட் வர்ற வரைக்கும்!''

- அ. இராமதாஸ்



சிரமப்பட்டுத் தன் உணர்வுகளைக் கட்டுப் படுத்திக் கொண்டாள்.

எழுந்து கையைக் கழுவ வாஷ் பேசின் அருகே சென்ற சுமதி ஜாடை -செய்து மாதங்கியைத் தன் அருகே அழைத்தாள். குரலை மிகவும் தாழ்த்திக் கொண்டாள்.

''மாப்பிள்ளை உன்கிட்டப் பிரியமா நடந்துக்கிறாரா?'' — ரகசியமாகக் கேட்டாள்.

கீழ் உதட்டைச் சட்டென்று கடித்துக் கொண்டாள் மாதங்கி. குப்பென்று அவள் முகம் சிவந்து போயிற்று. நெஞ்சு படபட வென்று துடித்துக் கொண்டது.

''நல்லாத்தான் நடந்துக்கிறார். ஏன் கேட்கிறீங்க பெரியம்மா?...'' கலவரத்துடன் தரையைப் பார்த்தாள்.

''உன் பெரியப்பா சிநேகிதர் தங்கவேலு வைத் தெரியுமில்லையா? அவர் முந்தாநாள் வீட்டுக்கு வந்திருந்தார். அவர் பெரியப்பா கிட்டச் சொன்னாராம். உங்க மக ஜயந்தி ஒரு விதத்திலே ரொம்ப அதிர்ஷ்டக்காரின்னு நினைக்கச் சந்தோஷப்பட்டுக்குங்க. அந்தப் பையன் ஹர்ஷன் கொஞ்ச நாளைக்கு முன்னே ஒரு பெரிய கார் விபத்தில் சிக்கி ஆச்சு போச்சுன்னு ஆஸ்பத்திரியில் கிடந்தான். அப்போ ஏற்பட்ட ஊனத்தை அந்தம்மா கஸ்தூரி மறைச்சு வச்சு மகனுக்குக் கல் யாணம் முடிக்க ஏற்பாடு செய்தாங்க...''

எச்சிலை விழுங்கிக் கொண்டாள் மாதங்கி. இதயம் இரண்டாகிவிடும் போலத் தீவிர மாகத் துடித்தது.

இந்தப் பெரியம்மா என்ன சொல்றாங்க? குழப்பமாக விழித்தாள்.

''அந்த விபத்துக்குப் பிறகு ஹர்ஷன் கல்யாணத்துக்கே லாயக்கில்லாத மனிதனாக ரொம்ப ஊனமாகி விட்டானாம்.''

உள்ளமும் உடலும் ஒருங்கே அவமான உணர்வில் அனலாக எரிவதை உணர்ந்தாள் மாதங்கி.

''கோவிச்சுக்காதே மாதங்கி... கேள்விப் பட்டதைச் சொன்னேன். உண்மை வேறாக இருந்தால் என்னைவிட யார் அதிகம் சந் தோஷப்படப் போறாங்க?

'''என் மருமகளுக்கு வளைக்காப்பு வச் சிருக்கோம்'னு உன் மாமியார் எங்க வீட் டைத் தேடி வந்து சொன்னா.. நான் உன் வாய்க்கு வேண்டியதைச் செய்துக்கிட்டுஆசை யோடு ஓடிவர மாட்டேனா? அதைக் கேட்டு நான் தவிச்ச தவிப்பை விவரிக்கவே முடி யாது. பணம் காசு மட்டும் ஒரு பெண்ணுக்கு போதுமா... திருமண வாழ்வு முற்றிலும் நிறைஞ்சு இருக்கணும் இல்லியா... ஆமாம் மாதங்கி... வந்து...'' மேலே பேச வந்தவள் சட்டென்று வாயை மூடிக் கொண்டாள்.

கையில் துவாலையும் — சோப்புப் பெட்டியு மாக கஸ்தூரி அவர்கள் அருகே வந்து நின்றாள்.

அவள் பேசியதை சம்பந்தி கேட்டு விட் டாளோ?... சுமதிக்கு நடுக்கமாக இருந்தது.

(தொடரும்)



# — — யா ஏ — — — — — டு — — ?

**அரவிந்தன்**

“சந்தேகமே இல்லை... நம்ப நித்யாவே தான்!”

ஆச்சரியத்திலும் அவசரத்திலும் வாய் விட்டே கூவினார் ராஜசேகர்!

“உஷ்...!” அவர் உதட்டின் மீது ஆள் காட்டி விரலை வைத்து அவரை அடக்கினாள் மரகதம். காரின் கதவை ஓசைப்படாமல் சாத்திவிட்டு வெளியே பார்த்தாள்.

வெளியே...

பாதையின் மறுபக்கம்—

வரிசையாக இருந்த கடைகளின் முன்னால் பிளாட்பாரத்தில் — அவர்கள் பெண் நித்தியா, யாரோ ஒரு வாலிபனுடன் பேசிக் கொண்டு நடப்பது அவள் பார்வைக்கு நன்றாகவே தெரிந்தது.

அன்று வெள்ளிக் கிழமை.

மயிலை கபாலீஸ்வரர் கோவிலும், அதைச் சுற்றியுள்ள பகுதியும் ஜன நெரிசலில் பரபரப்பாக இருக்கும் மாலை நேரம்.

சூழ்நிலையின் புனிதத்திலோ, இரைச்சலிலோ, பரபரப்பிலோ எதிலும் பங்கேற்க முடியாமல் மரகதத்தின் தாயுள்ளம் விபரீதமான பயத்திலும் கவலையிலும் உறைந்து போய் இருந்தது!

மீண்டும் வெளியே பார்த்தாள்.

நித்யா மெதுவாக நடந்து கொண்டு இருந்தாள்.

களைப்பில் முகம் லேசாக வாடி இருக்கிறாற் போலிருந்தது. இயல்பாகவே சிவந்த முகம் மேலும் கன்றிச் சிவந்து இருக்கிற மாதிரியும் தோன்றியது. அக்கம் பக்கம் கூடத் திரும்பாமல் அவள் நடந்து கொண்டிருந்தாள்.

மிகவும் ‘சீரியஸாக’ எதையோ விவாதித்தபடி நடந்து கொண்டு இருந்தாள்! அவர்கள் தங்களைக் கவனிக்கவில்லை என்பது மரகதத்துக்கும் தெரிந்தது.

அவள் பார்வை சட்டென்று அந்த இளைஞன் பக்கம் தாவியது. நல்ல உயரம். நல்ல சிவப்பு. விளையாட்டு வீரனைப் போலக் கட்டு மஸ்தாகத்தான் இருந்தான். நீல நிறம் பட்டை பட்டையாக வந்த முழுக்கைச் சட்டையை ‘இன்’ பண்ணி இருந்தான். இடுப்பில் பட்டையான பெல்ட். அகலமான பெல் பாட்டம் பேண்ட். செமி ஹீல் ஷூ. அவனும் பிடறிவரை தலை முடியும் சைட் பர்ன்ஸ்ும் விட்டிருந்தான். மற்றவர்களை விட அவனுக்கு அவைகள் அழகாகப் பொருந்தி இருக்கிற மாதிரி தோன்றியது மரகதத்துக்கு.

செருப்புகளை விடுகிற இடத்தில் நின்று மிகவும் நிதானமாக ஷூவை அவிழ்த்து வைத்துவிட்டு, நித்யாவின் செருப்புக்களையும் நகர்த்தி வைத்து; டோக்கன் வாங்கிக் கொண்டு தெப்பக்குளத்தின் படிகளில் நிதானமாக இறங்கித் தண்ணீரில் காலை நனைத்துக் கொண்டு மெதுவாக மேலேறி வந்து இரண்டாவது படிக்கட்டில் அவன் உட்கார்ந்து கொண்டான்.

நித்யா அவன் எதிரில் கையைக் கட்டியபடி நின்று கொண்டிருந்தாள்.

கீழே இறங்கிப் போய் அவர்களை வேவு பார்ப்பது ராஜசேகரின் கோபத்தைக் கிளப்பி விட்டுவிடும் என்று மரகதத்துக்கு நன்றாகவே தெரியும். மௌனமாக அவரைப் பார்த்தாள்.

“போகலாமா?” — கைக் கடிகாரத்தை ஒருமுறை பார்த்துவிட்டு காரின் கியரை மாற்றியபடி கேட்டார் ராஜசேகரன்.

“ம்” — என்ற மரகதத்தின் குரலில் அவ்வளவாக உற்சாகமில்லாததை அவரும் கவனித்தார்.

“என்ன யோசனை....?”

“ஒண்ணுமில்லே!”

“ஒண்ணுமில்லாமலே ஒரு யோசனையா?”—

“நம்ப நித்யாவைப் பத்தி நினைச்சேன். ரொம்பக் கவலையாயிருக்குது; விவரம் தெரிஞ்ச வயசுன்னும் விட முடியாது. விவரம் தெரியாதுன்னும் நினைக்க முடியாது. நமக்கு இருக்கிறதோ அவள் ஒருத்திதான். இவ்வளவு நாளும் எவ்வளவோ செல்லமா வளர்த்துட்டோம். இப்போ அவள் ஏமாந்து போயிடுவாளோன்னு கவலையா இருக்குது.”

“ஃபூலிஷ்!”—

“ஃபூலிஷ்தான்! என்னால அப்படித்தான் நினைக்க முடிகிறது. நான் உங்களைப் போலப் படிச்சவள் இல்லே. உங்களைப் போல வெளிநாட்டுக்கெல்லாம் போய்விட்டு வந்தவள் இல்லே. உங்களைப் போல உயர்ந்த உத்தியோகத்திலும் இல்லே. இது எல்லாத்தையும்

விட நான் உங்களைப் போல ஆண்பிள்ளை இல்லே. நான் பெண். அதைவிட ஒரு அம்மா! நாளைக்கு அந்தப் பெண்ணைப் பத்தின எல்லா நல்லதுக்கும் கெட்டதுக்கும் என்னைத் தான் சொல்வாங்களே தவிர உங்களை யாரும் எதுவும் சொல்ல மாட்டார்கள். அதனாலே நான் கவலைப்படறேன்.''

''நித்யா என்ன சின்னக் குழந்தையா? அவள் கல்லூரி மாணவி. உலகம் தெரிந்தவள். விவரம் தெரிந்தவள். அவளைப் பற்றி வீணாக் கவலைப்பட்டு உன் மனத்தை அனுவசியமாகக் கெடுத்துக் கொள்ளாதே.'' ராஜசேகரின் குரல் இதமாக ஒலித்தது.

மரகதம் அப்போதும் அவரைப் பார்க்காமல் வெளியிலேயே பார்த்துக் கொண்டிருந்தாள்.

''என்ன பைத்தியக்காரத்தனமான பயமெல்லாம் உனக்கு வருகிறது! நித்யா, யாரோ ஒரு பையன் கிட்டப் பேசிக்கிட்டுத்தானே இருக்கிறுள்? உடனே அவளைப் பத்திக் கவலைப்படவும், அவள் கெட்டுப் போய்விடுவாளோன்னு பயப்படவும் ஆரம்பித்து விடணுமா என்ன? அவள் என் மகளாக்கும்! எவ்வளவு வெளி நாட்டுக்குப் போயிருப்பேன்? எத்தனை பெண்களைப் பார்த்திருப்பேன்? ஒருத்தியையாவது ஆசையாகத் தொட்டுப் பார்த்திருப்பேனு? என் மகளும் அப்படித்தான் இருப்பாள். அவளைப் பற்றி உனக்குச் சந்தேகம் வந்ததே அவமானம்.''

நீங்க என்ன வேணுமானுலும் சொல்லுவீங்க. உங்களுக்கு என்ன? நாளைக்கு ஏதாவது ஒண்ணு விபரீதமா ஆயிட்டதுன்னு நாலு பேர் சிரிப்புக்கும் கேலிக்கும் நானல்லவா பலியாக வேண்டும்?''

''அப்படியெல்லாம் எதுவும் நடக்காது. அனுவசியமாக உன் கற்பனைகளை எல்லாம் ஓட்டிக் கொண்டு இருக்காதே!''

ராஜசேகர் ஆறுதலாக அவள் தோளில் தட்டிவிட்டு, கியரை மாற்றி மீண்டும் காரைக் கிளப்பி மெதுவாக ஓட்டினுர்.

மரகதத்தின் நியாயமான பயமும், கவலைகளும் அவர் மனத்திலும் லேசாக உரைத்தன. உண்மையில் அப்படியெல்லாம் நடக்காவிட்டாலும், எதற்கும் முன்னெச்சரிக்கையாக இருப்பது நல்லதுதான் என்று அவரும் நினைத்தார்.

'சட்'டென்று பாதையின் குறுக்கே வந்த சைக்கிள்காரனுக்காக காரை ப்ரேக்போட்டு விட்டு, மீண்டும் கியரை மாற்றி வேகமாகக் கிளப்பிய ராஜசேகர் கேட்டார்.

''அப்படியே நம்ப நித்யா அந்தப் பையனையே ஆசைப்படறதா வைச்சுக்கோ... என்ன பண்ணுவே....?''

மரகதம் ஒரு பதிலும் சொல்லாமல் அவரை நிமிர்ந்து பார்த்தாள். கண்கள் பளபளக்க மூக்கு நுனி சிவந்து போய் அவள் மீண்டும் ஒரு முறை அழுவதற்குத் தயாராகிக் கொண்டிருப்பது புரிந்தது.

''அமெரிக்காவிலே பெண்கள் தங்கள் பாய் பிரண்டோடு சுற்றுவது சகஜம்.''

''நாம் இருக்கிறது இந்தியா! இந்த மண்ணுக்கும் இந்த நாட்டுக்கும் ஒரு முறையான வாழ்க்கையும் நாகரிகமும் இருக்குது.''

''சபாஷ்!''



ராஜசேகர் சந்தோஷத்துடன் மரகதத்தின் தோளில் தட்டிக் கொடுத்தார்.

''பரவாயில்லையே நீ கூட இவ்வளவு அருமையாகப் பேசறியே மரகதம். ஒரு லெக்சர் ஏற்பாடு பண்ணலாமா?''

மரகதம் தலைகுனிந்து அந்தப்பாராட்டை வெட்கத்துடன் ஏற்றுக் கொண்டாள். கார் அடையாற்றில் உள்ள அவர்களின் பங்களா கேட்டுக்கு உள்ளே நுழைந்து கொண்டிருந்தது.

அரை வட்டமான சுற்றுப் பாதையில் சுற்றிவிட்டு லேசான குலுக்கலுடன் போர்ட்டிகோவில் நின்று இளைப்பாறுவது போல இரண்டு மூன்று முறை உறுமிவிட்டு அமைதியாயிற்று.

வீட்டுக்குள் நுழைந்ததும்நுழையாததுமாக சமையற்கார அம்மாளின் கவலை தோய்ந்த முகமும் —''பாப்பா இன்னும் காலேஜிலிருந்து வரலையம்மா!'' என்ற குரலும் அவர்களை வரவேற்றன!

மரகதம் — ராஜசேகரை கூர்மையாகப் பார்த்தாள்.

நாலு பேர் ஏச்சும் பேச்சும் என்றேனே, அந்த நாலு பேரும் — சமுதாயமும் எல்லாமே இங்கே இருந்துதான் துவங்குகிறது. இந்தச் சமையற்காரியும், வேலைக்காரியும் — தோட்டக்காரனும், கூர்க்காவும் — பக்கத்து பங்களாவில் உள்ள இவர்களின் தோழர்களும் — பிறகு அக்கம் பக்கமும் — மெல்ல மெல்லப் பரவும் நெருப்பு இது! — என்று சொல்லாமல் சொல்கிற பார்வை அது!

ராஜசேகருக்குப் புரிந்தது!

'சட்'டென்று அவளைத் தள்ளி விட்டு,

''பாப்பாவுக்கு காலேஜிலே ஏதோ ஸ்பெஷல் க்ளாஸ் இருக்கிறதா என் ஆபீஸுக்கு போன் பண்ணிச்சு. லேட்டா வரும் மரகதம். நான் சொல்லவே மறந்து போனேன்'' என்று கூறியபடியே மாடிப்படியேறிப் போய் விட்டார்!

காரில் வரும் போது தன் கணவன் சொன்ன சமாதானங்களை எல்லாம் அவள் தாயுள்ளம் ஏற்றுக் கொள்ள மறுத்தது. அடம் பிடித்துக் கொண்டிருந்தது.

அவள் சின்னப் பெண்!

தான் செய்யும் காரியத்தின் பின்விளைவுகளைப் பற்றி விபரம் தெரியாதவள். அதன் தீவிரம் புரியாதவள். அதன் மூலம் தனக்கு ஏற்படக்கூடும் பழியின் ஆழம் புரியாதவள்— அவளை இந்த நிலையிலேயே கண்டித்து திருத்துவது சுலபம். இதை வளர விட்டுவிட்டுப் பிறகு வேதனைப்படுவது கொடுமையான அனுபவம்! அவளைக் கண்டிக்க வேண்டும்....



கடவுள் மனிதனை அளவெடுக்கும்போது தலையின் சுற்றளவைப் பார்ப்பதில்லை. இதயத்தின் சுற்றளவைத்தான் பார்க்கிறான்.

- பால்கோல்டு

- எஸ். ராஜகனேஷ்

நினைத்துக் கொண்டே வந்த மரகதத்தின் மனம் 'சட்'டென்று நின்றது.

அவளைக் கண்டிக்க வேண்டும்!

''எப்படி?.... என்ன சொல்லி?... எடுத்த எடுப்பிலேயே இதைச் சொல்லலாமா? கேட்பாளா? பிடிவாதம் பிடிப்பாளா? ஒன்றுமேஇல்லாத விஷயத்துக்கு தடை சொல்லப் போக தடுக்கபட்டுள்ளது என்ற உணர்வின் உறுத்தலுக்குத் தீனி போடவே தடையை மீறும் தைரியமும் ஆசையும் வந்து விடுமோ? — ஒரே பெண் என்று அளவுக்கு மீறி செல்லமும், சலுகையும் கொடுத்து வளர்த்தது எல்லாமே அடிப்படையில் தவறுகளோ? எல்லாப் பெற்றோரையும் போல பிள்ளைகளை அடிமைகளாகவும், தங்களைக் கண்டாலே அரண்டு மிரண்டு போகிறவர்களாகவும் தான் வளர்க்க வேண்டுமோ?...

மரகதத்துக்கு லேசாகத் தலையை சுற்றுகிறாற் போல இருந்தது.

''நித்யாவைக் கண்டிக்க வேண்டும். ஆனால் உடனடியாக அல்ல. அவள் மனம் புண்பட்டு விடாமல் மிகவும் கண்ணியமாக.. இதமாகச் செய்ய வேண்டும்!— சற்று நிதானமாக அதைச் செய்ய வேண்டும்....!'' என்று தீர்மானித்துக் கொண்டாள்.

''என்ன டார்லிங் ரொம்ப 'டல்'லா இருக்கிறே?'' ராஜசேகரின் இதமான குரல் அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது.

''......'' அவள் மௌனமாகவே இருந்தாள்.

''நித்தியைப் பத்தியா கவலைப்பட்டுகிட்டு இருக்கே?''

''ஆமாம்!''

''ரெடிகுலஸ்.... அவளைப் பத்தி கவலைப்படறது உன் பலவீனம். நீ இன்னும் நினைச்சுகிட்டு இருக்கிற மாதிரி அவள் ஒண்ணும் பால் குடிக்கிற பாப்பா அல்ல. — படிச்சவள். உலகம் தெரிஞ்சவள் எது நல்லது? எது கெட்டது என்பது அவளுக்குத் தெரியும் எதுக்காக கவலைப்படணும்?''

''நீங்க எவ்வளவு சொன்னாலும் என்னால அப்படியிருக்க முடியலைங்க.... எவ்வளவு சமாதானம் செய்துகிட்டாலும் மனம் திரும்பத் திரும்ப அந்தக் கவலையும் வேதனையும் பட்டுக்கிட்டே இருக்கு. தயவு செஞ்சு நீங்களே நம்ப நித்யா கிட்டே பேசுங்களேன்... சமாதானமாவே பேசி, மெதுவா அவளுக்குக் கொஞ்சம் புத்தி சொல்லுங்களேன்...'

''நிச்சயம் கேட்கறேன்டார்லிங்.போதுமா? எனக்கு அவ பேரிலே நிறைய நம்பிக்கை இருக்கு. இருந்தாலும் உனக்காக கேட்கறேன்... அதுவும் இன்னிக்கு மாலையே கேட்கறேன் போதுமா?...''

'பளிச்'சென்று விளக்குப் போட்டாற்போல மரகதத்தின் அகமும் முகமும் மலர்ந்தது.

சொன்னபடியே அன்று மாலை வழக்கத்தைவிட சீக்கிரமாகவே வீடு திரும்பி விட்டார் ராஜசேகர்.

வெளியே வட்டமான புல்வெளியில் நாற்காலியைப் போட்டுக் கொண்டு ஓய்வாக உட்கார்ந்திருந்தார். நித்யா வீடு திரும்பு

வதை ஆவலுடன் எதிர்பார்த்துக் காத்திருந்தாள் மரகதம்.

வாசலில் டாக்ஸி வந்து நின்றது!

நித்யாவும் — அவளுடன் முதல் நாள் கோவில் வாசலில் பார்த்த அந்த இளைஞனும் வந்து கொண்டிருந்தனர்!

மரகதத்துக்கு மனதை என்னவோ செய்தது.

''அசோக். மீட் மை டாடி...மை மம்மி... டாடி இஸ் சஸ் அசோக்.. என் காலேஜ் மேட். ''அசோக் மில்ஸி''ன் வருங்கால உரிமையாளர். படிப்பு முடிந்து பிஸினஸ் மேனேஜ்மெண்ட், டெக்னிகல் டெவலப்மெண்ட் தெரிஞ்சுக்க ஸ்டேட்ஸ் போகிறார்!''

''ஹலோ''... ராஜசேகர் அவனிடம் கையை நீட்டினார்!

மனதுக்குள் அவன், தங்கள் பெண் நித்யாவுக்கு நல்ல ஜோடிதானா என்று அவர் பார்வை அளவெடுத்தது!

''பையன் வசதியானவன்தான். நல்ல ஜோடி.... பெண்ணும் விரும்பினால் இவனையே அவளுக்கு மாப்பிள்ளையாக முடித்து விட்டால் என்ன?....'' என்று நினைத்தபடியே அவனுடன் கைகுலுக்கினார்!

மரகதத்தின் மனதிலும் ஏறக்குறைய இதே வகையான எண்ணங்களே ஓடிக் கொண்டிருந்தன.

''பையன் வாட்டசாட்டமாகவும் அழகாகவும் இருக்கிறான். நித்திக்கும் நல்ல ஜோடி. அவளும் விரும்பினால் இவனையே முடித்து விட்டால் என்ன? நமக்கு இருப்பதோ ஒரே பெண். இவள் மனசுப்படியே நடக்கட்டுமே!' என்றெல்லாம் யோசித்தபடியே நின்றுகொண்டிருந்தாள் மரகதம்!

''அசோக் வீட்டிலே கல்யாணம் பண்ணிக்கிட்டுத்தான் வெளிநாடுபோகணும்ங்கிறாங்க. அசோக்கிற்கு இப்போ கல்யாணமே வேண்டாம் என்று பிடிவாதம். ரெண்டு பேருமே பிடிவாதம் பிடிக்கறாங்க. இடையிலே சாரோட முறைப்பெண் வேற ஒரு பக்கம் அவரைப் பார்த்து முறைக்கிறாள்! என்ன செய்யறது என்று ஒரே குழப்பம். அதுதான் உங்ககிட்டே யோசனை கேட்கிறதுக்காகக் கூட்டிக்கிட்டு வந்து இருக்கிறேன்.... டாடி!

''வா அசோக்... உட்கார். ஒரு நிமிஷத்திலே வருகிறேன்! அப்பாவுடன் பேசிக்கொண்டிரு. ப்ளீஸ்....!''

நித்யா உள்ளே ஓடினாள்!

''நான் அப்பவே சொன்னேனே கேட்டியா? என் பெண்ணைப் பத்தி என்ன நினைச்சே?'' என்கிற மாதிரி ராஜசேகர் பெருமிதத்துடன் மரகதத்தைப் பார்த்தார்.

மரகதத்தின் மனதில் ஒருவகையான ஏக்கம் பரவி இருந்தது! தன் பெண்ணுக்கு ஒரு நல்ல சம்பந்தம் கைநழுவிப் போய் விட்டது போல அவள் உணர்ந்தாள். நேற்று வரை கவலைப் பட்டுக் கொண்டு இருந்து தன்னை வதைத்த அதே மனம் இப்போது இப்படி ஏங்குவதைப் பற்றி அவளுக்குத் தன் மீதே கோபம் கோபமாக வந்தது!



# நெருப்பிலே பூத்த மலர்

பரலோகத்திலிருக்கும் பரமபிதாவே!
நாங்கள் ஒரு கயிறு திரிக்க
எண்ணினோம். முப்பிரிக் கயிறு.
ஆரம்பத்தில் அவனும் (தி சேம் ஓல்ட்
சிவகுமார்), அவளும் (அட தனக்கு
சிரிக்க மட்டுமன்றி அழுது நடிக்கவும்
தெரியும் எனும் பூர்ணிமா)
காதலிப்பதாக கொஞ்ச நேரம்
ணர்வது முதல் பிரி. அப்புறம் கொலை,
காதல், தியாகம், என்று தடுமாறு
வது கயிறின் இரண்டாம் பிரி.
கடைசியில் பேய் பிசாசு
என்று கிலூட்டிப் பயமுறுத்துவது
மூன்றாவது பிரி. இந்த முப்பிரிக்
கயிற்றில் எதிர்பாராமல் எங்கள்
படமே தற்கொலையாகத் தொங்கி
விடுமென்று எதிர்பார்க்கவில்லை.
எதையோ சொல்ல நினைத்து, எதையோ
சொல்ல முயன்று, எதையும்
சொல்ல முடியாமல் போன எங்களை
மன்னித்துவிடுங்கள். எங்களுக்குப்
பாவ மன்னிப்புக் கொடுங்கள்!

● ● ●

தேவனே! தங்கள் தவறை உணர்ந்து
விட்டார்கள்; எதிர்காலத்தில்
இப்படித் துன்புறுத்தமாட்டார்கள்
என்ற உத்தரவாதத்தின் பேரில்
ஆசீர்வதிப்போமாக.
(—அட, என்ன இது ஆயிரக்கணக்கான
பேர் வருகிறீர்கள்?
—பாதர், எங்களுக்கும் பாவமன்னிப்பு
வேண்டும்.
—நீங்கள் யார்?
—மேற்கண்ட படத்தைப்
பார்த்தவர்கள்!)
ஆமென். —நளினி சாஸ்திரி



# அமெரிக்கனுக்கு நூறு வயது! *****

இடைவிடாது சீறி ஓடிக்கொண்டிருக்கும் ஊர்திகள்; வழிந்து கொண்டிருக்கும் ஜனத்திரள்; புழுதி மண்டலம்; ஓசை அலைகள்— இப்படிப்பட்டதோர் சூழ்நிலையை வெகு அருகிலேயே கொண்டிருந்தாலும் இவற்றின் பாதிப்பை துளிக்கூட ஏற்காமல் நாற்பது ஏக்கர் பரப்புக்கிடையே, பசுமை மரப் போர்வைக்குள்ளே தனக்கென ஓர் ஏகாந்த இடத்தைப் பெற்று புராதன ஓவியமாய் காட்சி தரும் மதுரை அமெரிக்கன் கல்லூரி தனது நூறுவது வயதில் அடியெடுத்து வைத்துள்ளது.

ஜாஃப்னாவிலிருந்து 1834-ம் ஆண்டு மதுரைக்கு வருகை தந்த அமெரிக்க மிஷினரியின் முயற்சியால் தோன்றின ஓர் பள்ளியை 1881 ஆம் ஆண்டு, ஆறு மாணவர்கள் கொண்ட கல்லூரியாக்கி அமெரிக்கக் கல்லூரியின் சரித்திரத்தோடு தன்னை இணைத்துக் கொண்டவர் இக் கல்லூரியின் முதல் பிரின்ஸிபலான ரெவரண்ட் ஜார்ஜ் தாமஸ் வாஷ்பர்ன். ஆரம்பத்தில் பசுமலை கல்லூரி எனப்பட்டது.

தேச விடுதலையில் முழு மூச்சாய் இறங்கி 'வெள்ளையனே வெளியேறு' இயக்கத்தை மகாத்மா காந்தி தொடங்கிய போது அப்போதைய கல்லூரி முதல்வராக இருந்த ரெவரெண்ட் எட்கர் எம். ஃப்ளின்ட், மகாத்மாவின் இவ்வியக்கத்தில் பங்கு கொள்ள தமது மாணவர்களை ஊக்குவித்ததை இக் கல்விக் கூடத்தின் வரலாறு பேசுகிறது.

கல்லூரி முதல்வர் பதவி வகித்த முதல் இந்தியர் என்ற பெருமையோடு முழுக்க முழுக்க கதர் உடை அணிந்து வந்து மாணவரிடையே தேசிய உணர்ச்சியை உண்டு பண்ண உதவியவர் என்ற பெருமை ஏ. ரஞ்சிதம் அவர்களைச் சேருகிறது. இது நிகழ்ந்தது சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன்னால்.

✕ கல்லூரிக்குச் சொந்தமான கனமான கட்டிடங்களுள் ஒன்று

அதே காலகட்டத்தில் தந்தை பெரியார், அறிஞர் அண்ணாத்துரை போன்ற பல அரசியல் கட்சித் தலைவர்களையும் தங்கள் கல்லூரிக்கு வரவழைத்து அவர்களது கருத்துக்களை பெற்ற பெருமையும் இக் கல்லூரி மாணவர்களுக்கு உண்டு.

எல்லா மதத்தினரையும் சமமாக பாவித்து அவரவர் மத உணர்வுகளுக்கு சம மதிப்புக் கொடுக்கும் விசாலமான நோக்கையும் இக் கல்லூரி பெற்றுள்ளது.

அரசின் தூண்டுதலால் சமீப காலமாக தேசிய சமூக நலத்தொண்டு என்றஅமைப்பின் கீழ் மாணவ மாணவியர் சமூகத் தொண்டாற்றுவதை நாம் காண்கிறோம். ஆனால் 1912-ம் ஆண்டே அமெரிக்கன் கல்லூரி மாணவர்கள் 'பஞ்சமர் பள்ளி' என்று தொடங்கி முதியோர்களுக்கு இரவு நேரத்தில் கல்வி புகட்டினர். வேறு பல சமூக சேவைகளையும் 1935-ம் ஆண்டே இக்கல்லூரி மாணவர்கள் செய்யத் தொடங்கி விட்டனர்.

''எங்கள் கல்லூரி 1978-ம்ஆண்டு சுயாட்சி பெற்றது. தற்போது இங்கு சுமார் 1150 மாணவர்களும் மாணவியரும் பயில்கின்றனர். போஸ்ட் கிராஜுவேட் நிலையில் மட்டுமே பெண்கள் பயில்கின்றனர்.

''சுமார் 110 ஆசிரியர்கள் இங்கு பணியாற்றுகின்றனர். இவர்களில் 17 பேர் பி.எச்டி. பட்டமும் 16 பேர் எம்.ஃபில்— எம்.லிட். பட்டமும் பெற்றவர்கள். இன்னும் இரண்டே ஆண்டுகளுக்குள் மொத்த ஆசிரியர்களில் சுமார் 60 சதவீதத்தினர் பி.எச்டி., எம்.ஃபில், எம்.லிட். பெற்ற நிலைக்கு உயர்ந்து விடுவர்.

IN MEMORY OF THE REV.
GEORGE THOMAS WASHBURN
D.D. MISSIONARY OF THE A.B.C.F.M.
IN THIS DISTRICT FROM 1860 TO 1906
UNDER WHOM THROUGH THE ACTION
OF THE AMERICAN MADURA MISSION
AND THE PARENT BOARD THIS
COLLEGE HAD ITS ORIGIN IN
PASUMALAI IN 1881
WHO FOR MANY YEARS WAS IT'S
HONORED HEAD AND TOGETHER WITH
HIS WIFE ELIZA CASE WASHBURN
ITS GENEROUS BENEFACTOR
ERECTED BY HIS SONS
DAVID S. AND EDWIN C. WASHBURN





⌘ முதல் முதல்வருக்கு ஞாபகச் சின்னம்
⌘ பி. டி. செல்லப்பா
⌘ கல்லூரியின் பிரார்த்தனைக் கூடம்

''தற்போது பௌதிகத்தில் மாணவர்கள் ஆராய்ச்சி செய்து பி.எச்.டி. பட்டம் பெறும் அங்கீகாரத்தை இக் கல்லூரிக்கு மதுரை பல்கலைக் கழகம் அளித்து உள்ளது. சில மாதங்களில் ரசாயனத்திலும், விலங்கியலி லும் ஆராய்ச்சி செய்யும் அங்கீகாரத்தையும் பெற்று விடும்.

ஆராய்ச்சி—அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் தற்போது முடியும் கல்வி ஆண்டில் சுமார் 75 ஆயிரம் ரூபாயை உதவித் தொகையாக பகிர்ந்து கொடுத்து முப்பதுக்கும் மேற்பட்ட ஆசிரியர்களைப் பல துறைகளில் ஆராய்ச்சியில் ஈடுபடச் செய்திருக்கிறோம். வரப்போகும் கல்வியாண்டில் இதற்காக ரூ 1 லட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது'' என்று குறிப் பிட்டார் கல்லூரி முதல்வர் திரு பி. டி. செல்லப்பா.

1941-ம் ஆண்டு இக்கல்லூரியில் இண்டர் மீடியட் வகுப்பில் சேர்ந்தது முதற்கொண்டு இக் கல்லூரியிலேயே படிப்பை முடித்து ஆசிரி யராகி, பல்லாண்டு 'பர்ஸார்' எனப்படும் நிர்வாகப் பொறுப்பை வகித்து, தற்போது முதல்வராகப் பதவி வகிப்பவர் பி.டி. செல் லப்பா. அம்மாதிரியே மாணவப் பருவத்தி லிருந்து, உதவி முதல்வர் வரை உயர்ந்து 1943-லிருந்து இன்று வரை தொடர்புகொள் பவர் திரு ஆபிரஹாம்.

''இங்கு போதிக்கப்படும் பல நூதனகல்வித் துறைகளும் அர்த்தமுள்ளவையும் வாழ்க் கைக்கு பயன்படக்கூடியவையும் ஆகும். உதாரணமாக கோயில் சிற்பக்கலை, சிருஷ்டி இலக்கியம், கண்ணாடி பௌதிகம், தொழில் துறை ரசாயனம், 'ஜெனடிக்ஸ்' போன்ற பல மாறுபட்ட பாட திட்டங்களைக் கொண் டுள்ளோம்'' என்று குறிப்பிட்டார் உதவி பிரின்ஸிபல் ஆபிரஹாம்.

சில மாணவர்களை சந்தித்தேன்.

''மாணவர் பிரச்னைகளை நேரடியாகப் பேசித் தீர்த்துக் கொள்வதால் ஆசிரியர்—மாணவர் உறவில் பாதிப்புகள் ஏற்படுவதில்லை. மாணவர்களின் அவசியத் தேவைகளை உட னடியாக கவனித்து நிர்வாகம் செயல்படுவ தால் கல்வியில் தீவிரமாகக் கவனம்செலுத்த முடிகிறது. இக் கல்லூரியின் நூற்றாண்டு சமயம் இங்கு படிப்பதில் எங்களுக்குள்ள பெருமையை வார்த்தைகளால் வர்ணிக்க இயலாது'' என்று குறிப்பிட்டனர்.

வாட்ச்மேனாக இருபத்தேழு ஆண்டுகளா கப் பணியாற்றும் சாமுவேல், ''இது ஒரு கோயில் மாதிரி. இதைக் கும்பிடற மாண வங்களை எனக்குத் தெரியுமுங்க'' என்று குறிப் பிட்டார்.

நூற்றாண்டு நினைவு மண்டபமொன்று சுமார் 12 லட்சம் செலவில் கட்டப்பட இருக்கிறது. தமிழக முதல்வர் இம் மண்ட பத்துக்கான அடிக்கல் நாட்டு விழாவில் மார்ச் 29ந் தேதி பங்கேற்கிறார்.

— பி. ரங்கநாயகி



# கழுகு

முரட்டுக் காளையைத் தொடர்ந்து எஸ். பி. முத்துராமன் அண்ட் ரஜனி (விஷ் யூ எ ஹேப்பி மேரிட் லைஃப், ரஜனி) காம்பினேஷன்.

ரஜனி லேசாக ரத்தியுடன் விளையாட, வினையாக முடிவதற்குள் திருமணமாகி விடுகிறது. ஹிப்னடைஸ் பண்ணப்பட்ட வி.கே.ஆர்., ''ராஜா பிரில்லியண்ட் பாய்; அவன் அண்ணன் ஒரு தத்தி'' என்பதைத் திரும்பத் திரும்பச் சொல்வதும், ரஜனி வி.கே.ஆரிடம் தன்னை கமல், சிவகுமார் என்று ரீல் விடுவதும் பிறகு அவரே மாமாவானதும் வழிந்து சமாளிப்பதும்— நகைச்சுவை இழையோடும் இடங்கள்.

இதற்குப் பின் அத்தனை வசதிகளையும் தன்னிடம் கொண்ட ஆடம்பர பஸ்ஸில் நண்பர்கள் சகிதம் ரஜனி ஹனிமூன் கிளம்ப கதை ஆரம்பமாகிறது. தொடர்ந்து மசாலா வாசனை ஆரம்பமாகிறது. ஆங்கில அபகரிப்பு ஆரம்பிக்கிறது. ரேஸ் வித் த டெவில் பார்த்த விளைவு. சும்மா சொல்லக் கூடாது. தமிழில் புது அனுபவம் தான். ரீல் என்று தெரிந்தும் சுவாரஸ்யமாய்ப் பார்க்கிறோம்.

நவீன ஆடம்பர சாமியார்களைத் தாக்குகிற வேகம் கராட்டே வெட்டு. மாபெரும் வில்லன்களை ஒருவனும் அடித்து நொறுக்கும் ஹீரோவின் சக்தி. கபடா சண்டைகளை இதுபோன்ற படங்களில் தவிர்க்க இயலாது.

கண்கொள்ளா வெளிப்புறத்தை அள்ளிக் கொடுத்துள்ள பாபுவையும், சண்டைகளில் புதிய சப்தங்களையும் ரசிக்கிறோம். இனிய இரண்டு பாடல்களை வழங்கும் இ. ராஜாவைப் பற்றி 'ஒரு வரி' வெற்றிக்குக் காரணம் என்று சொல்லாவிட்டால் ராமானுஜநகர் எஸ். சுகவனம் சண்டைக்கு வந்துவிடுவார்.

— நளினிசாஸ்திரி



மணமகள் தேவை

நிம்மதியை நாடும்
வாலிபருக்கு
கொசுக்களை
விரட்டி அடிக்கும்
'வீராங்கனை' மணப்
பெண் தேவை வயது.
ஜாதி-பிரச்னை இல்லை.

வீராங்கனையை விட விரைந்து விரட்டிடும் **டார்டாய்ஸ்** கொசு
வர்த்திச் சுருள்.




இழக்காதீர் பொறுமையை-கொசுக்களை இழந்திட உதவிடும்.
**டார்டாய்ஸ்** கொசு
வர்த்திச் சுருள்.

நம்மை எதிர்க்கும் கும்பல், மக்களைப் பிடுங்கி எடுத்துவிடும்; ரத்தத்தை உறிஞ்சி விடும்...

அவரு என்ன.. கொசுக்களைப் பத்தி பேசுறாரா?

உங்களைப் பிடுங்கிடும்
கொசுக் கும்பலை ஓடவிரட்டிடும் **டார்டாய்ஸ்** கொசு
வர்த்திச் சுருள்

**கொளுத்துவீர்
டார்டாய்ஸ்-விரட்டுவீர்
கொசுக்களை!**

**டார்டாய்ஸ் கொசு
வர்த்திச் சுருளினால்.**



தயாரிப்பாளர்:
**பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்**
..போர்ட், பம்பாய்-400 023. ..போன்: 273831













நடிகைகள் தலை வாரிப், பூச்சூட்டிக் கொள்ளும் படக் காட்சிகளை இங்கே 'பின்னி' யிருக்கிறோம். யார் யார் எந்தப் படத்தில் இவ்வாறு காட்சியளிக்கிறார்கள்? சொல்லுங்கள் பார்ப்போம்!

விடை 47ம் பக்கம்

தொகுப்பு: திரைஞானி



**கல்கி**

சந்தா விவரம்

★

**மானேஜர்**
**கல்கி**
கிண்டி, சென்னை - 600 032

| | ஓராண்டு | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 60 | ரூ. 30 |
| இலங்கை | ரூ. 70 | ரூ. 35 |
| இதர வெளிநாடுகள் | ரூ. 110 | ரூ. 55 |

“தபால்காரன் கெணத்துல பொணம் மொதக்குது... தபால்காரன் கெணத்துல பொணம் மொதக்குது....''

சிந்தாமணி ஒரு எந்திரமாட்டம் பேசிக் கொண்டே அந்த வீதியில் ஓடிக் கொண்டிருந்தான்.

''எலே நின்னுப் பேசுடா... மொதக்கறது யாருடா?'' கிழவி ஒருத்தி அவனை இடை வெட்டிப் பின் பிசுங்கப் பிசுங்கப் பார்த்தாள்.

''ரங்கையன் பொண்ஜாதி செல்வந்தி ஆத்தா! காலையில வெளாங்குச்சி தொலக்கிய வாயை கழுவலாமேன்னு கெணத்துப் பக்கம் போனேன். செல்வந்தி படுத்து மொதக் கறதை பாத்துட்டு.... சே!''

—மூச்சிரைக்க பேசிய சிந்தாமணி இரும்ப வும் வேகமானான்.

''நான் பொறந்து பொட்டுக் கட்டி காட் டுக்குப் போவுற காலமும் வந்தாச்சு. காலம் எவ்வளவோ மாறியும் இந்தத் தபால்காரன் கெணத்துல விழுந்து உசுரை உட்ற நிலமட் டும் மாறவேயில்லே. ‘அந்தக் கெணத்தையே மண்ணைக் கொண்டு மூடினாத்தான் இந்தக் கண்ணராவிங்க ஒழியும் போல இருக்கு...''

— கிழவி சலிப்பானாள். அதைத்தொடர்ந்து வீதியே தபால்காரன் கிணற்றுக்கு ஓடியது. அந்தக் கிராமத்தின் சிவந்த ஒரே அழகியான செல்வந்தி அநியாயத்திற்கு ஊறிப் போய் விகாரமாய் உருமாறி நீர் நிலைமேல் மிதந்து கொண்டிருந்தாள். வேடிக்கை பார்ப்பவர் களில் ஒருவருக்கு கூட அவளை இழுத்துக் கரை யில் போடத் தோன்றவில்லை.

செய்தி கேள்விப்பட்ட ரங்கையன் அலறிப் புடைத்துக் கொண்டு சொந்தங்களோடு வந்து சேர்ந்தான். வந்த வேகத்தில் கிணற்றுக்குள் பாய்ந்து உடம்பை இழுத்து கரைக்குகொண்டு வந்து மடிமீது போட்டுக் கொண்டு 'ஓ'வென அலறினான்.

''ஐய்யோடி மவளே... என்னடி இது அநியாயம். நாங்க உனக்கென்னடி கொறை வெச்சோம்? இப்படி செஞ்சுபிட்டியே?'' —ரங்கைய்யனின் தாய் ஒப்பாரி வைத்தாள்.

''நேத்து பொறைலே 'ஆத்தா துணி துவைக்க தபால்காரன் கெணத்துக்குப் போறேன். கொஞ்ச நேரத்திலே வந்துட றேன்'னு சொல்லிப்பிட்டு போனபொண்ணு எங்களை இப்படி துடிக்க வெச்சுட்டாளே.''

அவள் ஒப்பாரியின் நீட்டத்தைக் கேட்டும் செல்வந்தியைப் பார்த்தும் ஊர் 'உச்சுஉச்சு' என்ற பரிதாபச் சப்தமிக்க மௌனத்தில் கிடந்தது. மாதம் தவறாமல் இப்படிமௌனத் தில் கிடந்து 'உச்சு, உச்சு' என்று பரித பித்தது அவர்களுக்கே கூட சலித்துப் போய் விட்டது.

''அடேய் ரங்கா போலீசு கேசுன்னுபிரச்னை நீள்றதுக்கு முந்தி பொணத்தை ஊட்டுக்குத் தூக்குடா. ஜல்தியா காரியத்தை முடிச்சு



சாகாட்டுக்கு அனுப்புடா. இல்லாட்டி வீண் வம்பும் தும்பும் வரும். உம், உம்....'' — ஒருவர் அனுபவத்தோடு கூடிய அவசரத்தைக் காட்டினர்.

அப்பொழுதுதான், பிணத்தைத் தூக்கும் போதுதான் செவந்தியின் காதிலும் கழுத்திலும் பரவியிருந்த வெறுமையை ரங்கைய்யன் பார்த்தான்.

அவன் தாயும், உறவும் கூடப் பார்த்து விட்டுப் பதறியது. ''ஐயோ, பதினஞ்சு பவுனு நகைகங்களைக் காணுமே. யாராச்சும் அதுக்கு ஆசைப்பட்டு இவளைத் தண்ணியிலே அமுக்கிக் கொன்னுப்பிட்டாங்களா? ஐய்யரப்பா....''

—ரங்கைய்யனின் ஓங்கலான அலறல் யாரைப் பாதித்ததோ இல்லையோ, கிணற்றுக்கு சொந்தக்காரனை சொக்கலிங்கத்தைப் பெரிதாய்ப் பாதித்தது. ஒரே விறுடி விதிர்த்துப் பின் சுதாரிப்பிற்கு வந்தான். அதுவரைக்கும்,

''ஊர்ல அது அதுங்க சாவறதுக்கு என் கெணறுதான்கெடைச்சக்க போல இருக்குது. இதுவே எனக்குப் பெரிய பிரச்சினையா போச்சு. ஒருத்தி மெதந்தா தண்ணி சுத்தமாவ ஒரு வாரம் பிடிக்குது. சே...'' என்ற சலிப்போடு கிணற்றைச் சுற்றி நிற்கும் ஊர் ஜனங்களோடு பேச்சோடு பேச்சாய்க் கிடந்தவன் மிரண்டான்!

ஊரும் கூட அந்த நிஜம் பார்த்துச் சித்தித்துப் பயந்தது.''இதுவரைக்கும் தற்கொலை தான் நடந்திருக்குது. இப்பக் கொலை வேற நடக்க ஆரம்பிச்சுடுச்சா...'' பதறியது.

**''வீட்டிலே நாற்பது குடைகளை வச்சுக்கிட்டு ஏங்க நனைஞ்சுகிட்டே ஆபீஸ் போறீங்க. யாராச்சும் இரவலா குடையை கேட்டா என்ன பண்றதுன்னு?''**

**''ஊகூம். இரவல் குடுத்தவன்களுக்கு ஞாபகம் வந்துட்டால் என்ன பண்றதுன்னு!''.**

**— அ. இராமதாஸ்**



தபால்காரன் கிணறு என்று அதற்கு ஏன் பெயர் வந்தது? சொக்கலிங்கத்தின் தகப்பனர் சில காலம் தபால்காரராகப் பணியாற்றியவர். பிறகு அந்த வேலையை விட்டு விட்டு விவசாயத்திலே முழுதுமாக இறங்கிய போதிலும் ஊர் மக்கள் பேச்சுவழக்கில் அவர் தபால்காரராகவே நீடித்தார். அவர் காலமாகி இன்று சொக்கலிங்கம் தலையெடுத்த பிறகும் கிணறுக்கு அதே பெயர் தான்!

எப்படியோ எல்லாம் முடிந்த போதிலும் கூட சொக்கலிங்கத்தின் மனப்போராட்டம் முடியவேயில்லை!

'செவ்வந்தி அந்த மாலைப் பொழுதில் கிணற்றுக்கு துணி துவைக்க வருவதற்கு முன்பாக அவன் மகள் ராசாத்தி அவனைப் பார்க்க அழுது கொண்டே வந்திருந்தாள். எட்டு மாதங்களுககு முன்னல் கடந்து போன தையில் முடிந்து போன திருமணத்திற்குப் பிறகு இந்த மாதிரி அவள் அழுது கொண்டு புருஷன் வீட்டிலிருந்து தாய் வீட்டிற்கு வருவது பத்தாவது தரமோ, பதினேராவது தரமோ!

'அப்பு, அப்பு' என்று வந்தவள் விசும்பினள். சொக்கன் நிஜம் புரிந்தநிலையில், கூடச் சேர்ந்து கலங்கினன். இவ்வளவிற்கும் காரணம் பத்துப்பவுன்! கல்யாணச் சீராய் ராசாத்திக்குப் போட ஒப்புக் கொண்ட பவுன் அது! இயலாமல் போனது சொக்கனுக்கு. ராசாத்தி வதை படுகிறள். இந்த நாட்டின் பெரும்பாலான மாமனர்களின் மண்டையைக் குடையும் பிரச்னை அவனையும் குடைந்தது.

சிந்தனையோடு காற்றுட வெளியில் வந்தான். கடலை வயல் வரப்பில் இறங்கினன். தொலைவில் தென்னை மரம் சூழ்ந்த இடத்தில் பெரிய வாயோடு ஆழமாய் படுத்துக் கிடக்கும் தனது கிணற்றுப் புறமாய் நடந்தான். அங்கே தவழும் சிலுசிலுப்பான காற்று அவனுக்கு பிடித்தமான ஒன்று! அவன் அந்தக் காற்றை ஆழமாய் சுவாசித்துக் கொண்டு கிணற்றை நெருங்கிய போது செவ்வந்தி துணிக்குச் சோப்புப் போட்டுக் கொண்டிருந்தாள். சொக்கனைப் பார்த்து விட்டுச் சிரித்தாள்.

''என்னண்ணே நீயும் துவைக்கனுமா?'' என்று கேட்டாள். சலிப்போடு தலையை அசைத்தான். அதே வேளையில் அவள் கழுத்தில் காதில் மின்னும் தங்கத்தைப் பார்த்துப் பெருமூச்சு விட்டான்.

''என்ன ஏதாச்சும் பிரச்னையா?''

''ஆமாம் புள்ளை. ராசாத்தி புருஷன் படுத்தற பாட்டைத் தாங்க முடியலை. என் நெலம புரியாம ராசாத்தியை சீர் நகைக்காக வேண்டி அடிச்சு அடிச்சுத் தொரத்திப்பிடறன்....''

அவள் அவனுக்காகப் பரிதாபப்பட்ட போது அவன் கற்பனை கொஞ்சம் விபரீதமானது. 'இப்பொழுது செவ்வந்தியை அப்படியே நீருக்குள் அமுக்கி அவளது உயிரை முதலில் பறித்து விட்டு, பின்னர் நகையைப் பறித்துக் கொண்டால்?'

கற்பனையை விருட்டென்று ஒடித்துக் கொண்டு அங்கிருந்து நடந்தான், அப்படி

நினைத்ததற்காகத் தன்னையே நொந்து-கொண்டபோது செவ்வந்தி பலமாய் அலறினள்.

''சொக்கண்ணே ... சொக்கண்ணே.... சொக்கண்...'' குரலால் திரும்பியபோது செவ்வந்தி கிணற்று நீரில் எப்படியோ மூழ்கி, மூச்சுக் காற்றுக்காகத் தவித்துக் கொண்டிருந்தாள். சில விநாடிகள் அவன் திகைத்த அதே வேளையில் சில நிமிடங்களுக்கு முன்னுல் தான் செயல்படுத்த நினைத்த அதே விபரீதம் தனது செயல்பாடு இன்றி எதிரே நடக்கிறது!

'காப்பாற்றலாமா விட்டுவிடலாமா? காப்பாற்றலாமா விட்டு விடலாமா?' — அவனுக்குள் வினைப் புயல் வீசி முடிந்த போது செவ்வந்தியின் உடம்பு நீருக்கடியில் பாரத்தோடு இறங்கிக் கொண்டிருந்தது.

சுற்று முற்றும் பார்த்தபோது தொலைவில் ஒரு கொக்கு மாத்திரம் பறக்கிறது! கொக்கு பறக்கும் அந்த வானப் பரப்பின் கீழான கடலை வயலில் காற்றின் தழுவல்.

அங்கே நிற்கச் சொக்கலிங்கத்துக்கு உதறியது. கடலை வயல் வரப்பில் வேகமாக வீட்டை எட்டித் திண்ணையில் வந்து உடம்பைக் கிடத்தியபோது மனத்தில் கொஞ்சம் பயம், கொஞ்சம் தைரியம், கொஞ்சம் நெருடல்! சில மணி நேரம் இப்படியே ஓட, வானத்தில் அரை நிலா உருண்டு கொண்டிருக்கப் புதிய முடிவோடு அவன் மாந்தலை பிடித்துக் கடலை வயல் வரப்பில் மறுபடியும் இறங்கியபோது மணி பன்னிரண்டு.

அதன் பின் நீரில் மிதக்கும் செவ்வந்தியை கரைக்கு இழுத்து காதுக்கும் மூக்குக்குமாய் கைகளை ஓடவிட்டு, தங்கங்களைக் கழற்றிக் கொண்டு ஒரு வேலாங்குச்சியின் உதவியோடு மறுபடியும் செவ்வந்தியை நீர் நிலைக்கு நடுவில் தள்ளி விட்டு விட்டு....'

—முடிய மறுக்கும் மனப் போராட்டத்தை ஒரு வழியாய் முடித்துக் கொண்டு நிமிர்ந்தான் சொக்கலிங்கம். ராசாத்தி தெரிந்தாள்.

''அப்பு எனக்குப் பயமா இருக்கு...'' என்றாள்.

''பயந்தா ஆகுமா? நான் இல்லே தைரியமா? பயப்படாதே. பதினஞ்சு பவுனையும் பக்கத்து ஊருக்குப் போய் ஆசாரி கிட்டக் கொடுத்து அழிச்சுப் புது நகையா மாத்தி எடுத்துக்கிட்டு வந்துடறேன். நீ தைரியமாப் போட்டுக்கலாம். ஊரிலேயும் உங்க மாமியார் வூட்லயும் கேட்டா நான் இருந்த நெலத்தை வித்துப் போட்டதாச் சொல்லு. மேல பிரச்னை வந்தா பின்னால பார்த்துக்கலாம்....''

''நீ என்ன சொன்னாலும் என் மனசு மேவ மாட்டேங்குது. பாவம் செவ்வந்தியக்கா!''

''அட சும்மா கெட புள்ளே. என்னால இந்த ஜென்மத்திலே இனி காசு சேத்துத் தங்கத்தை வாங்க முடியாது.''

—அவள் அவனது ஓங்கலான குரலில் அடங்கினாள்.

மறுநாள் மதியம் அவன் புறப்பட்டான். மடியில் பதினைந்து பவுன். ஊருக்குள் நடந்து பக்கத்து ஊருக்குப் போக மனசுக்குள் ஏதோ ஒன்று நெருடியதால் குறுக்கு வழியில் கால்களைச் செலுத்தினான்.

சின்னச் சின்ன ஓடைகளை, வயல்களை, வரப்புக்களை என்று தாண்டி சின்னக் குன்று ஒன்றின் ஓரமாய் நடந்து கொண்டிருந்தபோது எதிரே நாலு பேர்! இடக்கு நெளியச் சிரித்துக்கொண்டே சொக்கலிங்கத்தை நெருங்கினார்கள்.

''கையிலே எவ்வளவு வெச்சிருக்கே?''— ஒருவன். சொக்கலிங்கம் அதிர்ந்தபோது பின் மண்டையில் பலமாய் ஒரு அடி. மூளை கூழாய்க் கரைந்து போன மாதிரி ஒரு மின்னல் நினைப்பு. பின் சொக்கலிங்கத்துக்கு ஒன்றும் தெரியவில்லை.

அவர்கள் அவனைச் சலித்தபோது பதினைந்து பவுனைப் பார்த்துப் புருவத்தை உயர்த்தினார்கள்.

''இவனை என்ன செய்யலாம்?'' — ஒருவன் கேட்க மற்றவர்கள் ஒரு முடிவுக்கு வந்தனர்.

விடிந்து விட்டது.

தபால்காரன் கிணற்றில் கவிழ்ந்தபடி மிதக்கும் புதிய பிணம் பற்றிய செய்தியில் ஊரே கிணற்றைச் சுற்றிக் கொண்டது.

ஒருவன் பிணத்தை நிமிர்த்திச் சொக்கலிங்கத்தைப் பார்த்து விட்டு ஊரைப் போலவே விக்கித்தான்!

## எண்ணெய்ப் பொருளாதாரம்

அ. ஆசீர்வாதம்

''உலகம் சிறியதுதான். எல்லோரும் சோதரரே''
என்னும் முழக்கத்தின் இடையே ஓர் முணுமுணுப்பு:

உலகப் படத்தில் என்
தேசம் ஒரு சிறு திட்டு
சிறு திட்டில் என் நகரம்
இன்னும் ஒரு சிறு பொட்டு
நகர மக்கள் வெள்ளத்தில்
என் குடும்பம் துளி சொட்டு
வேறு எங்கோ மற்றோர் சிறு திட்டில்
இன்னும் ஒரு சிறு பொட்டில்
உள்ள சில சொட்டுக்களால்
எண்ணெய் விலையை
ஏற்ற முடிகிறது!
என்
சிக்கனத்தையெல்லாம்
சிதைக்க முடிகிறது!

ஷவர் பாத்தில் இஷ்டம் போல் நனைந்து நனைந்து குளித்தாள். குளித்துவிட்டுத் தன்னை சுமங்களா அழகுபடுத்திக் கொண்டாள். கோமதி வரும்வரை அந்த மகிழ்ச்சியான இருப்பத்தை மனத்தில் வைத்துக் கொண்டிருக்க வேண்டுமே! அந்தச் செய்தியை சொல்லும்போது அவளிடம் காணப்படும் இரட்டிப்புச் சந்தோஷத்தைக் காண வேண்டுமென்கிற துடிதுடிப்பு மனத்தில்!

அறைக்குள் செல்வதும், வெளியே வந்து மாடித் தாழ்வாரத்தில் நின்று கோமதி வருகிறளா என்று கவனிப்பதுமான அந்த மாலை நேரம் நெருங்கியது.

பின் அந்த நேரம் நழுவிக்கொண்டிருந்தது.

வெளிச்சம் இருட்டுக்குள் பிரவேசிக்கலாயிற்று.

'நேரமாகிக் கொண்டே இருக்கிறதே! வழக்கத்தை விட இன்று என்ன இவ்வளவு நேரமாகியும் அவளைக் காணவில்லை! நாலரை மணிக்கெல்லாம் வந்துவிடுவாளே! தப்பினல் ஐந்து! எக்காரணத்தைக் கொண்டும் அதற்கு மேல் நேரம் ஆகாதே!'

மாடி நடை பாதையில் நின்று கொண்டு கீழே வாசலில் கேட்டைப் பார்த்தபடி நின்ருள். மற்ற அறைகளில் இருப்பவர்கள்தான் வந்தார்கள்.

ஆனல்,

அவளைக் காணவில்லை—

சுமங்களா அமைதி இழந்தாள். மனதுள் இருந்த சந்தோஷத்தை யாரோ அபகரித்துக் கொண்ட மாதிரி இருந்தது.

மாடியை விட்டுக் கீழே இறங்கினள்.

ஹாஸ்டலின் ஆபீஸ் அறைக்குள் நுழைந்து கல்லூரிக்குப் போன் செய்தாள். ரிங் போய்க் கொண்டே இருந்தது. எடுத்துப் பேசுவார் யாருமில்லை.

'எங்கே போவதானலும் அறைக்கு வந்து விட்டுத்தான் போவாள்! சகோதரன் இருமேனியின் வீட்டுக்குப் போவதானல் கூட இங்கே வந்து என்னையும் அழைத்துக் கொண்டுதானே போவாள்!'

மணி ஆகிக் கொண்டே இருந்தது. அஸ்தமித்தும் விட்டது. சுமங்களா மெதுவாகப் பொறுமை இழந்து கொண்டிருந்தாள்.

ஹாஸ்டல் வாசலில் ஒரு அம்பாஸிடர் வந்து நின்றது. அதிலிருந்து நான்கைந்து பெண்கள் இறங்கினர்கள்.

வேகமாக உள்ளே வந்தார்கள். சுமங்களா நிற்கும் நடை பாதையில் ஓட்டமும் நடையுமாக வந்து நின்ருர்கள்.

''இங்கே சுமங்களாங்கிற...''

''ஏன், நான்தான்!''

''கொஞ்சம் சீக்கிரமா எங்களோட வர முடியுமா?''

''ஏன், என்ன விஷயம்?''

''நாங்க ஸிடி காலேஜ் ஸ்டூடன்ட்ஸ். எங்களுடைய மேத்ஸ் புரொபஸர் மிஸ் கோமதி....'' — அவர்கள் பேச்சை முடிக்க முடியாமல் அரும்பிய வேர்வையில் நின்ருர்கள்.

''கோமதிக்கு என்ன?'' — சுமங்களாவின் உடம்பு நடுங்கத் துவங்கியது.

''பயப்படாதீங்க. அவங்களுக்கு ஒன்றும் இல்லை. அவங்களை ஆஸ்பத்திரியிலே சேர்த்திருக்கோம். ஒரு சின்ன ஆக்ஸிடெண்ட்.''

''ஆக்ஸிடெண்டா?''

''ஆமாம்... அநேகமா ஹிட் அண்ட் ரன் மாதிரித் தோணுது. ஆள் யாருன்னு தெரியலே. மண்டையிலே நல்ல அடி. காலில் போன் பிராக்சராயிருக்கும்னு டாக்டர்கள் சந்தேகிக்கிருர்கள்.''

அவ்வளவையும் அந்த மாணவிகள் சொல்லிக்கொண்டே வர சுமங்களா காரில் வந்து விழுந்தாள். கார் புறப்பட்டது. வந்தவர்களில் ஒருத்திதான் காரை நிதானமாக ஓட்டத் துவங்கினள்.

''காலேஜ் விட்டு நாங்களெல்லாம் சேர்ந்தேதான் வந்தோம். எங்களிடம் மிஸ் விடை பெற்றுக் கொண்டு கொஞ்ச தூரம்தான் போயிருப்பாங்க. ராங் ஸைட்லே வந்த ஒரு மோட்டார் சைக்கிள்காரன்...

'மோட்டார் சைக்கிள்...! டேய், பரமேஸ்வரா! உன் வேலைத்தனத்தைக் காண்பித்து விட்டாய்!'

''மிஸ் அப்படியே நடைபாதையிலே விழுந்திட்டாங்க. மோட்டார் சைக்கிள்காரன் அடுத்த நிமிஷத்தில் திரும்பி மறைந்து விட்டான். மோட்டார் சைக்கிள் நம்பரை, ஆனா யாரும் கவனிக்க முடியவில்லை.

''ஆஸ்பத்திரியில் மிஸ்ஸோட பிரதர்—போலீஸ் ஆபீஸர் இருமேனி இருக்கார்.''

''ஆக்ஸிடெண்ட் எப்போ நடந்தது?''

''நாலு மணிக்கு!''

அவர்களில் இன்னெருத்தி, ''இப்பத்தான் நினைவு வந்தது. நினைவு வந்தவுடனே உங்களைத்தான் கேட்டாங்க'' என்ருள்.

# விட்டில் அணைத்த விளக்கு

மகரிஷி

'கோமதி... மை டியர்! உனக்கு ஒன்றும் நேரக் கூடாதே! உனக்காக நான் பிரார்த்திக்கிறேன்.'

அவள் கண்ணில் கண்ணீர் வழிந்து கொண்டே இருக்க, கார் மருத்துவ மனை வாசலில் வந்து நின்றது.

தாங்க முடியாத அழுகையும், குமுறலும் கிளம்ப மருத்துவ மனை நடை பாதையில் ஓடினள்.

''கோமதி!''

அவளுக்கு அருகில் போய் நின்றாள்.

தலையைச் சுற்றிக் கட்டுப் போட்டிருந்தார்கள். கால் சற்று உயரமான 'வி' வடிவிலான கட்டையில் தூக்கி வைக்கப்பட்டிருந்தது. காலில் பேண்டேஜ்.

அழுகையுடன் தன் அருகில் வந்து நின்ற சுமங்களாவைப் புன்னகையுடன் பார்த்தாள் கோமதி. உதடுகள் துடித்தன.

கையைக் கெட்டியாகப் பிடித்தாள். அவளால் வாய் திறந்து பேச முடியவில்லை.

அட்வகேட் சந்தானத்துடன் அவள் அந்த சிடி சிவில் கோர்ட் வாசலில் போய்க் காரிலிருந்து இறங்கினாள். கூடவே கோமதியும் வந்திருந்தாள்.



அவளுக்குத் தேவையான எல்லா முன்னேற்பாடுகளுடன் அட்வகேட் சந்தானம் வந்திருந்தார்.

இருவரும் கோர்ட் எதிரே உள்ள மர நிழலில் வெகு நேரம் வரை பேசிக்கொண்டே நின்றனர்.

சிடி சிவில் கோர்ட்டின் ஜட்ஜ் தன் இருக்கையில் அமர்ந்தவுடன் அவர் முன் அந்த விண்ணப்பத்தை நீட்டினார் சந்தானம்.

''என்ன இது?'' என்று கேட்டவாறே அதை வாங்கிப் படிக்கலானார்.

அவர் படித்துக் கொண்டிருக்கும்போதே அதன் உள்ளடக்கத்தையும், அதன் தேவையின் அவசியம் பற்றியுமான ஒரு சிறு குறிப்பொன்றை வாய்மொழியாகக் கூறினார் அட்வகேட் சந்தானம்.

'சார்ஜ்'ஜில் உள்ள விவரத்தைப் படித்துக்கொண்டே அட்வகேட் சந்தானம் கூறுவதையும் கவனமாகக் கேட்டுக் கொண்டார் ஜட்ஜ்.

தாவாவுக்கான காகிதங்களையும் அவர் முன் சமர்ப்பித்தார்.

ஆசிரியர்: "மின்சார பல்ப்பை கண்டு பிடித்தவர் யார்?"
மாணவன்: "40 வாட்ஸ் பல்ப்பையா 60 வாட்ஸ் பல்ப்பையா ஸார்?"



- உ. ராஜாஜி

எல்லாம் ஒரே சமயத்தில் அவர் பார்வைக்கு வைக்கப்பட்டபோது கோர்ட் ஹாலில் அட்வகேட் சந்தானத்துக்குப் பின்னால் சற்றே தள்ளி நுழை வாயில் அருகில் நிற்கும் சுமங்களாவையும் ஜட்ஜ் கவனிக்கத் தவறவில்லை.

நீதிபதி, சந்தானத்திடம் சுமங்களாவைச் சுட்டிக் காட்டி ஏதோ கேட்டார்.

"ஆமாம்" என்றார் சந்தானம்.

அவர் கொடுத்த விண்ணப்பத்தின் பேரில் சில சந்தேகங்களைத் தெளிவாக்கிக் கொண்டார். பிறகு விண்ணப்பங்களை ஏற்றுக் கொண்டு, மேலும் நடவடிக்கைக்கான குறிப்புக்களை உடனே எழுதத் துவங்கிவிட்டார்.

அங்கேயே இருந்து தான் பெற்றுக்கொள்ள வேண்டிய உத்தரவுகளைப் பெற்றுக் கொண்டாள். அனுப்ப வேண்டிய உத்தரவுகளையும் உடனே அனுப்ப ஏற்பாடு செய்துவிட்டுக் கோமதியுடன் வெளியே வந்தாள் சுமங்களா.

அட்வகேட் சந்தானத்தின் காரில் அவள் சிடி சிவில் கோர்ட்டை விட்டு வெளியே வரும்போது, மோட்டார் சைக்கிளில் பரமேஸ்வரன் அவர்களைத் தாண்டிப் போய்க் கொண்டிருந்தான்.

சாலையின் குறுக்கே வந்த அவனுக்காகக் காரின் வேகத்தைச் சற்றே குறைத்தார், சந்தானம்.

அப்பொழுது அவன் காரின் பின் ஆசனத்தில் இருந்த அவர்களையும் பார்த்தான்.

அவன் நிற்கவில்லை. போய்விட்டான்.

---

எழுத்தாளர்: "பாதிக் கதையை எழுதிக் கொண்டு வந்திருக்கிறேன்...! மீதிக் கதையை வாசகர்களின் யூகத்துக்கே விட்டுவிடலாம். புதுமையாக இருக்கும்!"

ஆசிரியர்: "முழுக்கதையையும் வாசகர்களின் யூகத்துக்கு விட்டுவிட்டால் என்ன? அதைவிடப் புதுமையாக இருக்குமே!"

- எஸ். தேவாதிராஜன்

சிடி சிவில் கோர்ட்டில் அந்த மாதிரி சார்ஜைப் போடும்படி யோசனை கூறியவளே கோமதிதான்.

வக்கீல் சந்தானத்திடம் அழைத்துச் சென்று, அது பற்றித் தீவிரமாக விவாதித்து, அந்த முடிவுக்கு வர அவள் பெரிதும் உதவினாள்.

முதல் நாள் சுமங்களாவை அட்வகேட் சந்தானத்துடன் கோர்ட் வாசலில் பார்த்தவுடன் அடுத்த நாள் பரமேஸ்வரன் நிதானமற்றுக் காணப்பட்டான்.

முதல் காரியமாகப் பேங்குக்குப் போனான். அதில் அவன் கணக்கில் உள்ள அனைத்தையும் — ஒரு சிறு தொகை நீங்கலாக — எடுத்துவிடும் தீர்மானத்துடன், அதற்கான செக்குடன் போனான்.

கவுண்டரில் செக்கை நீட்டினான். கம்பி வலைக்குள் அதன் பயணம் புதிய முறையில் நடப்பதைப் பார்த்தான்.

எப்பொழுதும் செக்கை நீட்டியவுடன் புன்னகையோடு பித்தளை டோக்கன் ஒன்றை வைக்கும் பாங்க் குமாஸ்தா, அன்று அப்படிச் செய்யவில்லை.

செக் தலைமை அக்கௌண்டெண்டிடம் சென்றது. பின்பு அது மேனேஜரிடம் சென்று அங்கேயே நின்று விட்டது.

"ஸார்... உங்களை மேனேஜர் உள்ளே கூப்பிடுகிறார்."

பரமேஸ்வரன் மேனேஜரின் அறைக்குள் போனான்.

"உட்காருங்கள்..."

அவன் பதட்டத்துடன் உட்கார்ந்தான்.

"மன்னிக்க வேண்டும் மிஸ்டர் பரமேஸ்வரன். இந்த செக்கை நாங்கள் ஆனர் பண்ணுவதற்கில்லை. சிடி சிவில் கோர்ட்லே உங்க தொகை அனைத்தையும், முடக்கியிருக்கிறார்கள். இண்டரிம் அட்டாச்மெண்ட் ஆகியிருக்கு."

பரமேஸ்வரன் சினத்துடன் எழுந்தான். அவன் முகம் திடீரென்று வியர்த்தது. 'அவள் முந்திக் கொண்டு விட்டாள்; மோசம் செய்துவிட்டாள்.'

'எல்லாத் தொகையையும் ஒரே வங்கியில் போட்டது எவ்வளவு தவறாகப் போய்விட்டது! நாம் இங்கே கணக்கு வைத்திருப்பது இவளுக்கு எப்படித் தெரியும்? ஆரம்பத்திலிருந்தே எல்லா விஷயங்களையும் இவளுக்கு யாரோ சொல்கிறார்கள். அது யாராக இருக்கும்? இந்த யோசனையை இவளுக்கு யார் சொல்லிக் கொடுத்திருப்பார்கள்? நேற்று சிவில் கோர்ட்டில் அந்தக்

காரில் இவனுடன் புரொபஸர் கோமதியையும் பார்த்தோமே!

'அவனுடைய மூல பலமே அவள்தான். இருக்க இடம் கொடுத்துப் பாதுகாப்பது போல எதிர் காலத்துக்கும் இந்த வகையில் யோசனைகள் சொல்லி உதவிக் கொண்டிருக்கிறள். முதலில் அவளை ஒழிக்க வேண்டும். அவளை ஒழித்தால்தான் சுமங்களாவின் பலம் பாதியாகக் குறையும்....'

அவனுடைய திட்டத்தை அவன் நிறைவேற்றிக் கொள்ள அன்று மாலையே திட்டம் போட்டான்.

கோமதி கல்லூரி விட்டு வெளி வருவதைக் கல்லூரிக்கு எதிரே சற்று தூரத்தில் நின்று கொண்டு சுகுமாரனும் பரமேஸ்வரனும் பார்த்தனர். முதலில் கோமதி கல்லூரி மாணவிகள் நடுவிலும் பின்பு தனிமையாகவும் பிரிந்து வரும்போது....

டாக்டரைப் பார்த்துப் பேசிவிட்டு வந்த திருமேனி சுமங்களாவின் அருகில் நின்றன்.

அந்தப் போலீஸ் அதிகாரி உடையில் அவன் எவ்வளவு கம்பீரமானவனாக இருக்கிறன்!

'மோதித் தள்ளியவன் யார் என்று தெரியவில்லை. இன்வெஸ்டிகேஷன் நடந்து கொண்டிருக்கிறது. இவள் இப்பொழுதுதான் சரியாகக் கண் திறந்து பார்க்கிறள். பேச முடியவில்லை. இவளிடம்தான் கேட்க வேண்டும். எப்படியும் அடையாளங்களைக் கூறிவிடுவாள்.' என்று திருமேனி தனக்குள் எண்ணிக்கொண்டார்.

'பரமேஸ்வரனாகத்தான் இருக்கும் என்கிற தன் ஊகத்தைச் சொல்லி விட்டால் என்ன? ஒருவேளை அவரில்லாமல் போய் நம்முடைய நினைப்புக்கும் இதற்கும் உள்ள ஒற்றுமையை வைத்துக் கொண்டு சொல்வது நியாயமாக இருக்குமா?'

கோமதி நினைவு வந்து பேசத் துவங்கியவுடன் தெரிந்து விடுகிறது. யாராக இருந்தாலும் பிடிபடப்போவது உறுதி.

கோமதி, நினைவு வருவதும், நினைவு தப்புவதுமாகப் படுத்திருந்தாள். அவளுக்கு இடையருது சிகிச்சைகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன.

கல்லூரிமாணவிகள் சுறுசுறுப்புடன் செயல்பட்டுக் கொண்டிருந்தார்கள். தேவையானதை உடனுக்குடன் வாங்கிக் கொண்டு வந்தார்கள். அதைப் பார்க்கவே சுமங்களாவுக்குப் பெருமையாக இருந்தது. 'இவள்தான் எவ்வளவு பெரிய சைன்யத்தை உருவாக்கி வைத்துக் கொண்டிருக்கிறள். எல்லாம் ஆரவாரமற்ற அமைதிப் படை....'

டாக்டர் எல்லாரையும் வெளியேறும்படி கூறினர். எல்லாரும் வெளியே வராந்தாவுக்கு வந்து விட்டார்கள்.

சிந்தனையுடன் வெளியே வந்தாள் சுமங்களா. அவளுக்குப் பரமேஸ்வரன் மேலும் சுகுமாரன் மேலும்தான் சந்தேகம்.

மருத்துவ மனையின் வெளி வராந்தாவின் மறு கோடியில் போலீஸ் யூனிஃபாரத்தில் நின்ற திருமேனி டாக்டர் ஒருவருடன் பேசிக் கொண்டிருந்தார்.

"உங்களுக்கு நாங்க பண முடிப்பு குடுத்த விழாவுக்கு இவ்வளவு அதிகமா கூட்டம் வருமுன்னு நாங்களே எதிர் பார்க்கலே..!"

"நானுந்தான் எதிர்பார்க்கலே..அந்தஸா கடன்காரன் களும் வந்துட்டான்கள்!"

– கிரிஜா மணாளன்



மாணவிகள் கூட்டம் கூட்டமாக மண்டலமிட்டுக் கவலையுடன் பேசிக் கொண்டிருந்தார்கள். மேலும் கூட்டம் கூடத் தொடங்கி விட்டது. கோமதியுடன் பணிபுரியும் மற்ற புரபஸர்களும், லெக்சரர்களும் வேகமாக வந்து குழுமிக் கொண்டிருந்தனர்.

கூட்டத்தினின்று மெதுவாக வெளியே வந்தாள், சுமங்களா. மருத்துவ மனையின் பிரதான வாசலுக்கு வந்து நின்றபோது...

''சுமங்களா!''

கார் ஒன்றில் உட்கார்ந்திருந்த சுகுமாரன் நடைபாதையோரமாக நின்ற அவளிடம் வந்து நின்றன்.

'இவன் எதற்காக இங்கே வந்தான்? எத்தனை நேரமாக இங்கே' நிற்கிறன்? கோமதி அடிபட்டதை இவனிடம் சொல்லலாமா... வேண்டாமா? இவனிடம் சொல்லி என்ன ஆகவேண்டும்?'

திருமேனி மருத்துவமனையின் நீண்ட நடைபாதைத் தாழ்வாரத்தின் ஒரு கோடியில் நின்று கொண்டு டியூட்டி டாக்டரிடம் பேசிக் கொண்டிருந்தாலும் அவர் பார்வையெல்லாம் சுமங்களாவின் மேல்தான் இருந்தது. தாழ்வாரத்தில் அமைதி இன்றி அவள் நடப்பதையும்.... கல்லூரி மாணவிகளுடன் கலக்காமல் தனியே தவித்துக் கொண்டிருப்பதையும் பார்த்துக் கொண்டிருந்தார்.

அவள் மெதுவாக மருத்துவ மனையை விட்டு வெளியேறிக் கொண்டிருப்பதையும் பார்த்தார். அதன் பிறகு மருத்துவ மனை வாசலில் வந்து நின்ற காரைப் பார்த்தார். அதில் அமர்ந்திருந்த சுகுமாரனையும் பார்த்து விட்டார்.

(தொடரும்)

காந்தி பார்க் டு காந்தி பார்க்.

அந்த 7ம் நம்பர் டவுன் பஸ் ஒவ்வொரு ஸ்டேஜிலும் நின்றபோது...

கூட்டம் இறங்கி ஏறி நிரம்பி வழிந்தது.

பஸ் காந்திபுரத்தை நெருங்கிக் கொண்டிருந்தது.

திடீரென்று 45 அல்லது 50 வயது மதிக்கத் தக்க பெரியவர் கத்தினார்.

''ஐயோ! என் மணிபர்ஸைக் காணோம்!''

டிரைவர் சட்டென்று பிரேக்கை மிதித்தார்.

''கிரீச்!''

பஸ் கொட்டாவி விட்டுக் கொண்டு நின்றது.

பஸ்ஸில் இருந்தவர்கள் எல்லோரும் அந்தப் பெரியவரைத் திரும்பிப் பார்த்தார்கள்.

''என்னோட பர்ஸை யாரோ எடுத்துட்டாங்க. என் மனைவி உயிருக்குப் போராடிக்கிட்டிருக்கா. டாக்டர் மருந்தும் மாத்திரையும் உடனே வாங்கி வரச் சொல்லி எழுதிக் கொடுத்தாரு. இந்த ஊசி மருந்துகள் வந்தாத்தான் உங்க மனைவி பொழைப்பாங்கன்னு சொன்னாரே... மருந்து வாங்க வெச்சிருந்த பணத்தை யாரோ பிக்பாக்கெட்



அடிச்சுட்டாங்களே...'' என்று பெரியவர் புலம்பினார்.

பஸ்ஸிலிருந்த ஆண்கள் அவரைப் பரிதாபமாகப் பார்த்தார்கள்.

''பெரியவரே! பர்ஸிலே எத்தனை பணம் வெச்சிருந்தீங்க?'' என்று ஒரு ஜிப்பாக்காரர் வினவினார்.

''என் மனைவி சாகக் கிடக்கிறா... அந்தப் பதற்றத்திலே பெட்டியிலிருந்த பணத்தையெல்லாம் பர்ஸிலே திணிச்சேன்... எவ்வளவுன்னு தெரியலே!''

''மருந்துக்கு எவ்வளவு பணமாகும்?''

''நூறு ரூபாய் ஆகும்னு டாக்டர் சொன்னாரு...''

கண்டக்டர் ஷபீலா எல்லோரையும் தள்ளிக்கொண்டு முன்னால் வந்தார்.

அவர் : ''வீடு வரை உறவு! வீதி வரை மனைவி: காடுவரை பிள்ளை! கடைசி வரை...?

இவர் : ''இன்கம்டாக்ஸ் ஆபீஸரின் தொந்தரவு!''

- ம. ராஜஸ்ரீ



''இத பாருங்க... பாவம் பெரியவரு. இந்தப் பெரியவரோட பர்ஸை யாராவது எடுத்திருந்தா தயவு செய்து கொடுத்துருங்க. ஒரு உயிரைக் கொன்ன பாவத்துக்கு ஆளாயிடாதீங்க... பர்ஸைக் கொடுத்த பின்னாலே சத்தியமா நாங்க உங்களை ஒண்ணும் செய்ய மாட்டோம். தயவு செஞ்சு எடுத்தவங்க கொடுத்திருங்க...'' என்று கண்டக்டர் பெரிவருக்காகப் பரிந்து பேசினார்.

ஜிப்பாக்காரர் லேசாய்ச் சிரித்தார்.

''பெரியவரோட பர்ஸை எடுத்தவன் இந்தக் கூட்டத்திலே இருக்கானோ இல்லே, முந்திய ஏதாவது ஒரு ஸ்டேஜிலே இறங்கிட்டானோ? பர்ஸ் பஸ்ஸிலே காணமப் போச்சன்னு அவ்வளவுதான். திரும்பக் கிடைக்காது. பாவம் பெரியவர்! அவரோட சம்சாரம் உயிரோட போராடிக்கிட்டு இருக்காங்க. ஆளுக்கு ஒண்ணோ ரெண்டோ.. அஞ்சோ பத்தோ கொடுத்தீங்கன்னா... ஒரு உயிரைக் காப்பாத்தின புண்ணியம் கிடைக்கும்...'' என்றார் ஜிப்பாக்கார்ர் பஸ்ஸிலிருந்தவர்களைச் சுற்றிப் பார்த்தவாறே.

அதே சமயம்—

பெரியவருக்கு முன்னால் ஐந்தாவது ஆளாக நின்றிருந்த ஓர் இளைஞன் தன் பாக்கெட்டைத் தொட்டுப் பார்த்தான்.

பர்ஸ் கனத்தது.

இரக்கமில்லாத தொழில் அவன் தொழில். இருந்தாலும் ஏனோ அவன் கை பாக்கெட்டில் நுழைந்து....

இரண்டு விரலால் பர்ஸை எடுத்து சுற்றிலும் ஒரு முறை பார்த்து... யாரும் தன்னைக் கவனிக்காதபோது... பர்ஸைக் கீழே போட்டுவிட்டு இரண்டு பேருக்கு அப்பால் தள்ளி நின்றான்.

ஒரு காக்கிச் சட்டைக்காரர் பின்னால் நகர காலில் மெத்தென்று ஏதோ பட...

சிவப்பு நிற பர்ஸ் அவரைப் பார்த்து கொக்காணி காட்டியது.

காக்கிச் சட்டைக்காரர் கத்தினார்.

''இதோ! பர்ஸ் இங்கே கெடக்குது...''

எடுத்துப் பெரியவரை நெருங்கி நீட்டினார்.

''இந்த பர்ஸா பாருங்க?''

பெரியவர் ஒரு விநாடி கூர்ந்து பார்த்துவிட்டுத் தலையாட்டினார்.

''பெரியவரே! இனிமேலாவது ஜாக்கிரதையாய்ப் போங்க... மருந்து வாங்கிட்டு உடனே வீட்டுக்குப் போய் உங்க சம்சாரத்தைக் காப்பாத்துங்க....'' ஜிப்பாக்காரர் சொல்லிவிட்டுக் கீழே இறங்கினார்.

பெரியவரும் கீழே இறங்கி நடந்தார்.

அந்த இளைஞனும் சட்டென்று அவர்கள் பின்னால் இறங்கிக் கொண்டான்.

அவர்கள் பின்னாலேயே சிறிது தூரம் சென்று அந்த இளைஞன், ''பெரியவரே! கொஞ்சம் நில்லுங்க'' என்றான்.

பெரியவரும் ஜிப்பாக்காரரும் திரும்பினார்கள்.

''மரியாதையா அந்தப் பர்ஸைக் கொடுங்க....''

பெரியவரும் ஜிப்பாக்காரரும் விழிக்க...

சட்டென்று அவர்களை நோக்கிப் பாய்ந்து இரண்டு பேரின் சட்டையைப் பிடித்தான் அந்த இளைஞன்.

''படவா ராஸ்கல்களா!...எடுங்கடா என்னோட பர்ஸை... நானும் உங்களை ரொம்ப நாளாக் கவனிச்சுக்கிட்டுத்தான் வர்றேன். பர்ஸை யாரோ பிக் பாக்கெட் அடிச்சுட்டதாப் பொய் சொல்லி மத்தவங்களை நம்ப வெச்சு....மனைவி சாகக்கிடக்கிறா, பொண்ணு கார்லே அடிபட்டு ஆஸ்பத்திரியிலே கிடக்கிறான்னு பொய் சொல்லி.... பொதுமக்களை ஏமாத்திக் காசு சம்பாதிக்கிறதே உங்க தொழிலாப் போச்சு... நடங்கடா ஸ்டேஷனுக்கு...''

மப்டி உடையிலிருந்த அந்த போலீஸ் இளைஞன் இருவரின் பிடரியின் சட்டையை இறுகப் பற்றி நெட்டித் தள்ள...

இரண்டு பேரும் பரிதாபமாக விழித்தார்கள்!




## 19. ஒரு தந்தையின் கடமை

சாதாரணமாகத் தேர்தல் முடிவில் அக்கறை காட்டும் கட்சிக்காரர்கள், காலை பனிரெண்டு மணி வரை வரும் முடிவுகளை 'முடிவுகளாகக் கருத மாட்டார்கள். 'பிற்பகலில் எண்ணப்படப்போகும் தொகுதிகள்தான் தங்களுக்குச் சாதகமானவை' என்று தங்களைத் தாங்களே உற்சாகப்படுத்திக்கொள்வார்கள்.

மணி மூன்று, நான்கு என்று ஆக ஆக, தோல்வி தொடரத் தொடர அவனுக்கு நடுக்கமே ஏற்பட்டது.

டெலிபோனில் காமராஜர், சம்பத், தனுஷ்கோடி நாடார், தாமோதரன், மற்றும் கட்சிப் பிரமுகர்கள் அனைவரையும் கூப்பிட்டு, ஏதாவது ஒரு வகையில் ஆறுதல் தேடிக் கொள்ள விரும்பினான்.

குடிக்கக் குடிக்கப் போதை ஏறாமலிருந்தது அந்த ஒரு நாளில்தான்!

எதுவுமே அவனுக்கு ஆறுதல் அளிக்கவில்லை!

இரவு வரையில் அவனும், அவனுடைய டிரைவர் பாபுராவும் மட்டுமே அங்கே இருந்தார்கள்.

'நிச்சயமாக தி.மு.க. ஜயித்து விட்டது' என்று தெரிந்த பிறகுதான் அவன் தூங்கச் சென்றான்.

தூக்கம் முள்ளின்மீது; விழிப்பு நெருப்பின் மீது. பத்திரிகைகளைப் பார்க்கவே அவனுக்கு வெட்கமாக இருந்தது.

'அவர் மந்திரியா, இவர் மந்திரியா' என்று எண்ணிப் பார்த்தபோது அவனைச் சிலபேர் கத்தியால் குத்துவது போல் இருந்தது.

அவன்மீது விழுந்த எதிரொலியைப் பற்றி யாருக்கு என்ன கவலை?

திட்டமின்றி தி.மு.க.வினர் வேடிக்கையாகச் சொல்லி வந்தது போல் 67ல் ஆட்சியைப் பிடித்தே விட்டார்கள்.

இதிலே கொடுமை காமராஜர் தோற்றது. அதுவும் விருதுநகரிலேயே தோற்றது!

அவன் காமராஜர் வீட்டுக்குப் போனான். அங்குள்ளோரெல்லாம் ஒரு முன்னுதாரணத்தைக் காட்டி ஆறுதலடைய முயன்று கொண்டிருந்தார்கள்.

''1962ல் காஞ்சிபுரத்தில் அண்ணாதுரை தோற்கவில்லையா?'' என்பதே அது.

பலர் அங்கே அழுது கொண்டிருந்தார்கள்.

கார் விபத்து காரணமாக கால் வலியோடு படுத்துக் கொண்டிருந்தார் காமராஜர். அவரது ராஜதந்திரத்தின் மீது என்னதான் அவன் குறை கண்டாலும் அன்று விருதுநகரைத் தீயிட்டுப் பொசுக்கலாமா என்று தோன்றிற்று. 'அறம் பாடிப் பார்க்கலாமா' என்று அவனுக்குத் துடிப்பு வந்தது.

காமராஜரின் தோல்வி கறை படியாத அரசியல் கைகளுக்குக் கிடைத்த பெரும் தோல்வி. அன்றிலிருந்து இன்றுவரை



படிக்க இடமில்லை; படித்தால் வேலை இல்லை என்ற நிலையைக் கண்ணாரக் காண்கிறோம். கல்வித் திட்டத்தில் காமராஜர் பெரிய நிபுணர் என்பதை யாராலும் மறுக்க முடியாது.

எப்படியோ தி. மு. க.வை வெற்றி பெற வைத்ததன் மூலம் இந்திய ஜனநாயகத்தில் தமிழகம் ஒரு கரும் 'புள்ளியை' வைத்து விட்டது. இந்த வெற்றி தி. மு. க.வின் அசாத்தியத் திறமையினாலும் உழைப்பினாலும் கிடைத்ததல்ல.

மூன்று வருஷ காலம் தமிழக அரசை மற்றவர்கள் கையில் ஒப்படைத்து விட்டு காமராஜர் இந்திய அரசியலுக்குச் சென்றதன் நேரடி விளைவு.

அவன் காமராஜருக்காக விருதுநகருக்குப் பேசச் சென்றிருந்தபோது, அங்கிருந்த காங்கிரஸ்காரர்கள் எல்லாம் 'அரிசி அரிசி' என்றே கதறினார்கள். காங்கிரஸ்காரர்களைக் கண்டால், பெண்கள் எல்லாம் அரிசியைச் சேலையைப் போட்டு மூடுகிறார்கள்'' என்றார்கள். உள்நோக்கோடு ஒரு செயற்கை உணவுப் பஞ்சம் உருவாக்கப் பட்டிருந்தது.

அவன் உடனே சென்னைக்கு ஓடிவந்து ஆட்சி அதிகாரத்தில் இருந்தவரிடம் கூறினான். அவரோ அமைதியாகச் சிரித்துக் கொண்டு ''நான் ஒன்றும் செய்ய முடியாது. கிராமங்களில் கொள்முதல் செய்தாலும்தான் காங்கிரஸ்காரர்கள் வோட்டு கிடைக்காது என்று ஆட்சேபிக்கிறார்கள்'' என்றார்.

வழக்கமான பழமொழி ஜெயித்து விட்டது!

ஆம்; காங்கிரசைக் காங்கிரஸ்காரன்தான் தோற்கடித்திருக்கிறான்; மற்றவர்கள் தோற்கடித்ததே இல்லை!

காங்கிரஸின் தோல்விக்குப் பிறகு அவன் இரண்டு மூன்று நாட்கள் பைத்தியக்காரன் போலவே திரிந்தான். தி. மு. க. வின் வெற்றியை நியாயப்படுத்தவே முடியவில்லை.

அண்ணா நல்லவர்; பண்பானவர்; சில விஷயங்களில் காமராஜரையும் விட உயர்ந்தவர். ஆனால் தி. மு. க. என்பது தமிழர் நாகரிகத்துக்கு இறைவன் கொடுத்த சாபம்.

பரம்பரையான பண்பாடுகள், மங்கலங்கள் ஆலயங்கள், அறநெறிகள் அனைத்தையும் பாழ்படுத்திக் கேலி செய்தே தி. மு. க. அப்பாவி

பெண்கள் தன்னைத் தானே காத்துக்கொள்ளக் கற்க வேண்டிய சில முக்கியமான Locks, Throws உள்ளன. ஒரு பெண் தன்னைத் தாக்க வரும் ஆடவரை எப்படிக் கீழே பந்து போல் உருட்டுகிறாள் என்பதைப் படத்தில் காணலாம். இந்தப் பெண் அந்த ஆடவரைக் கீழே வீழ்த்துவது எப்படி தெரியுமா? பின்புறம் வந்த அந்த ஆடவர் தன்னைக் கட்டி அணைக்க முயலும்போது அவரது பிடிகளிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு, Double hand locks முறையில் அந்த ஆடவரை வீழ்த்துகிறாள்.

பெண்கள் கிறித்துவக் கல்லூரி மாணவிகள் (WCC) இந்தக் கராத்தே கலையைத் தற்காப்புக்காகக் கற்றுக் கொள்வதில் மிகுந்த ஆர்வம் செலுத்துகிறார்கள்.

இந்தக் கல்லூரி மாணவிகள் ஐம்பது பேர் சுமார் இரண்டு வருஷத்துக்கு மேல் கராத்தே தற்காப்புக் கலையைப் பயின்று, Brown belt வாங்கும் நிலைக்கு உயர்ந்துள்ளார்கள். இவர்கள் கராத்தே கலையில் Throws, Locks மிக நன்றாகப் பயின்றுள்ளார்கள். பெண்கள் கிறித்துவக் கல்லூரி மாணவி பரமேசுவரி Brown belt வாங்கி கராத்தே கலையில் பரிமளிக்கிறார் என்பது மகிழ்ச்சிக்குரிய செய்தி. விரைவில் இவர் கறுப்பு பெல்ட் வாங்குவதற்குக் கடும் பயிற்சி மேற்கொண்டிருக்கிறார்.

ஒரு பெண் ஒரு கயவனிடமிருந்து தற்காத்துக் கொள்ள கராத்தேயில் முக்கியமாகத் தெரிந்து கொள்ள வேண்டிய அம்சங்கள்: Throws, Locks, Punches, and kicks.

## கராத்தே பயிற்சி 29

பயிற்சியாளர்: டோனி பொன்னையா சித்திரம்: [illegible] படம்: உத்ரா

தயாரிப்பு: குண்டுமணி





மக்களிடம் வளர்ந்தது. நாணயத்திலும் ஒழுக்கத்திலும் அதற்கு எப்பொழுதுமே நம்பிக்கை இல்லை.

மாநகராட்சியிலிருந்து மாநில ஆட்சி வரை அது பின்னாளில் எவ்வளவு நாற்றமெடுத்தது என்பதை நாடு கண்டது.

கொஞ்ச நாட்கள் வரை அவன் கூட்டங்களில் பேசாமல் இருந்தான்.

கடற்கரையில் நடந்த தோல்வி விளக்கப் பொதுக்கூட்டத்தில் கூட அவன் பேசவில்லை.

கொஞ்ச நாள் குடும்ப வேலைகளைக் கவனிக்கலாம் என்று தன் மூத்த மகள் அலமேலுவுக்கு அவன் திருமணம் பேச விரும்பினான்.

ராணி மேரி கல்லூரியில் பி.யூ.சி. படித்துக்கொண்டிருந்த அலமேலுவுக்கு அப்போது வயது பதினாறுதான் என்றாலும், பெண்கள் விஷயத்தில் 'சுபம், சீக்கிரம்' அல்லவா!

நாச்சியார்புரத்துக்குச் சென்ற தன் சகோதரியிடம் ''நல்ல மாப்பிள்ளை பார்த்து வரும்படி'' கூறினான்.

இதனை அவன் சகோதரி, அவனது ஒன்று விட்ட சகோதரியிடம் கூற, அவர் உடனே, ''என் மகனுக்குச் செய்யக் கூடாதா?'' என்று கோபம் கொண்டார்.

அந்த மாப்பிள்ளைக்கு நல்ல குணம். உடனேயே மணப் பேச்சு முடிவாகிவிட்டது.

1967 மே மாதத்தில் திருமணம். மூவாயிரம் அழைப்புக்கள் பல இடங்களுக்குப் போயின.

அண்ணா அவர்களுக்கும், கலைஞர் கருணாநிதி அவர்களுக்கும் அவனுடைய நண்பர்களே கொண்டு போய்க் கொடுத்தார்கள்.

''கண்ணதாசன் நேரில் வந்து கூப்பிட்டால் நான் வருகிறேன்'' என்று அண்ணா நேரடியாகவே சொல்லி விட்டார்.

ஆனால் கருணாநிதி அப்படி இருக்கவில்லை. இத்தகைய ராஜதந்திரத்தில் கருணாநிதி அண்ணாவை விடக் கெட்டிக்காரர்!

சற்றும் அவன் எதிர்பாராதபோது கருணாநிதியும், பாவலர் முத்துச்சாமியும் திடுதிப்பென்று வந்து விட்டார்கள்.

வந்தது மட்டுமல்ல; கடும் பகையையும் மறந்து, அவன் தோளின் மீது கைபோட்டுக் கொண்டு, ''நீர் குழந்தைப் பிள்ளை ஐயா! அண்ணாவுக்கோ எனக்கோ உம்மீது துளிக்கூட வருத்தமில்லை. ஏதாவது முக்கியமான விஷயம் இருந்தால் டெலிபோன் பண்ணும்'' என்றார்.

என்னதான் நீங்கள் கருணாநிதியை ஆத்திரமாகத் திட்டுங்கள். நேருக்கு நேர் சந்தித்தால் எந்தப் பெரிய மனிதரும் அவரிடம் சரணாகதியடைந்து விடுவார்கள். இந்திய அரசியலில் அந்தக் கவர்ச்சியுள்ளவர்களில் அவரும் ஒருவர். அதனால்தான் எந்த வீழ்ச்சிக்கிடையிலும் 'எழுந்து எழுந்து' நின்றுவிடுகிறார்!

இன்னும் இரண்டு முறை கருணாநிதி அவனைத் தொடர்ந்து சந்தித்திருந்தால் அவன் என்ன ஆகியிருப்பானோ, சொல்ல முடியாது!

கருணாநிதி அந்தத் திருமணத்துக்கு வந்தது சம்பந்தி வீட்டாருக்கும், உறவினர்களுக்கும் பெருமையாக இருந்தது. அத்தோடு நாற்றுக்கு நூறு காங்கிரஸ் தலைவர்களும், மத்திய மந்திரிகளும் வந்து விட்டார்களே...

---

விடை

1 ராணி சந்திரா-சிவகாமி (பத்ரகாளி)
2 மதுரை ஜெயந்தி-டெல்லி கணேஷ் (உறங்காத நினைவுகள்)
3 ஸ்ரீதேவி-ஜெய-விஜயா (மூன்று முடிச்சு)
4 சரோஜா-ரம்யா (ஒரு கோயில் இரு தீபங்கள்)
5 ஷோபா-சேகர் (ஒரு விடுகதை ஒரு தொடர் கதை)
6 ஸ்ரீ வித்யா, எம். விஜயா, எஸ். ஆர். விஜயா லட்சுமி ஸ்ரீ, பேபிசாரதா, பேபி கமலமணி (ஆறு புஷ்பங்கள்)
7 ஈ.வி. சரோஜா-ஜி. வரலட்சுமி (என் தங்கை)

---

அந்தப் பொம்மை மேலும் மேலும் ஊசலாட்டத்தில்தான் இருந்தது.

செட்டிநாட்டுத் திருமணங்களில் அக்காள் ஆறுலும் தங்கை ஆறுலும், சீர் வரிசையில் ஆளைப் பிழிந்து ரத்தத்தை உறிஞ்சி விடுவார்கள்.

அன்று பெண்ணழைப்புக்குப் பிறகு, அங்கும் ஒரு சம்பந்திச் சண்டை வந்து, இரவு ஒரு மணிக்குத் தீர்ந்தது.

இந்த வகையில் கருணாநிதி, எம். ஜி. ஆர். இருவருக்குமே ஒரு ராசி உண்டு. அவர்கள் எந்தத் திருமணத்துக்கு வந்து வாழ்த்தினாலும் அந்தக் குடும்பம் தழைத்தோங்கி நிற்கும்.

கருணாநிதியின் மீது இப்படித் திடீரென்று தோன்றிய அன்பு பத்து நாளில் திசை தப்பியது.

வரைமுறையற்ற பொதுக் கூட்டங்களுக்கு வாழ்வையும், வசதியையும் வீணடித்துக் கொண்டு அவன் செல்லத் தொடங்கினான்.

அவனது திருமகள் திருமணத்துக்கு பெரும் தொகைகள் கொடுத்த நண்பர்களை அவன் மறந்துவிட முடியாது.

அதென்னவோ, கையிலே காலணா இருக்காது. திருமணம் பேசுவான்; லட்சக் கணக்கில் பணம் வந்துவிடும்!

அன்றைய சினிமா உலகில் எல்லோரும் பெரிய மனிதர்கள்.

சின்னப்பா தேவர், நாகி ரெட்டி, டைரக்டர் ராமண்ணா, சிங்காரம் செட்டியார், மாடர்ன் தியேட்டர்ஸ் சுந்தரம் — இன்னும் மறக்க முடியாத எவ்வளவோ பேர்கள்!

அப்பொழுதுதான் எம். ஜி. ஆரும் அவனும் பகையாக இருந்தும், ஒரு படத்தில் இருந்த அவனது பங்கை வாங்கிக்கொண்டு பெருந் தொகையை அவர் கொடுத்தார்.

அன்றைய சினிமா உலகில் ஆரவாரங்கள், ஆர்ப்பாட்டங்கள் மிகவும் குறைவு. ஒருவருக்கொருவர் உதவுவதில் அவ்வளவு துரிதம் காட்டுவார்கள். அதனால்தான் அவன் சேமிப்பில்லாமலேயே வாழ்ந்து தொலைத்தான்.

இந்தச் சூழ்நிலையில் நண்பர் கோவைச் செழியன் ஒரு பிரபலமான இந்திக் கவிஞரை அவனிடம் கூட்டி வந்தார். வந்ததும் வராததுமாக அவர் அவனது கால்களில் சாஷ்டாங்கமாக விழுந்தார்.

(வளரும்)




✖ மாலினிராஜா, சென்னை-17

கே: வாயை எப்போது திறக்கக் கூடாது?

ப: தலைக்கு மேல் வெள்ளம் போய்க்கொண்டிருக்கும்போது! (நன்றி: ஆல்ஃப்ரட் நியூமன்)

✖ இரா. சேகரன், மதுரை

கே: முன்பின் தெரியாதவர்க்கு லட்ச ரூபாய் கொடுக்கும் தாங்கள் எனக்கு நூறு ரூபாய் கொடுங்களேன்?

ப: அதெப்படிக் கொடுக்க முடியும்? என்னிடம் உண்மையிலேயே நூறு ரூபாய் இருக்கிறதே!

✖ தேவி தெய்வநாயகம், கல்லிடைக்குறிச்சி

கே: இளைஞர்களுக்கு அறிவுரை கூறும் பகுதியை நீங்கள் எழுதுவீர்களா?

ப: உலகிலேயே மிகவும் மலிவானதும் அபரிமிதமானதும் உள்ள பொருள் அறிவுரை தான். அதை வாரி வாரி வழங்கப் பலர் காத்திருக்கிறார்கள். ஏற்கத்தான் யாரும் தயாராக இல்லை. பலர் தாங்கள் எடுத்த முடிவுக்கு ஏற்ற அறிவுரையைத்தான் எதிர்பார்க்கிறார்கள். அதுமட்டுமல்ல, நமக்குத் தெரியாதது இவனுக்கு என்ன தெரியும்? அட்வைஸ் பண்ண வந்துட்டான் என்பதும் பலரது எண்ணம். ஆகவே அறிவுரை போன்ற பகுதியை எழுதும்படி யாரையும் கேட்காதீர்கள் என்பதுதான் என் அறிவுரை.

✖ எஸ். கணேசன், திருநெல்வேலி

கே: தாங்கள் பதில் சொல்லும் திறமையை மெச்சி சாகித்ய அகாடமி விருது கொடுக்கப் போவதாக கேள்விப்பட்டேன்.

ப: இருக்காது. சமீபத்தில் சங்கீத நாடக அகாடமி விருதுகள் வழங்கும் விழாவின் போது அகாடமி தலைவர் கூறிய விஷயம் பத்திரிகைகளில் வரவில்லை. விருதுகளுக்குச் சிபாரிசு செய்து பலர் நிர்ப்பந்தித்தார்களாம். இதனால் சலிப்புற்று தன் பதவியை ராஜிநாமாச் செய்துவிடக் கூட நினைத்தாராம். இப்படி இருக்கிறது நிலைமை. அடியேனுக்குச் சிபாரிசு செய்ய ஆளில்லையே!

✖ ஜயந்திமணி, புரசவல்

கே: சில இலக்கிய விமர்சனங்களைப் புரிந்து கொள்வது கடினமாக இருக்கிறதே, விமர்சகர் யாருக்காக எழுதுகிறார்?

ப: அது என்னவோ இலக்கிய விமர்சனம் என்றால் சுலபமாகப் புரிந்து கொள்ளக் கூடாது என்ற எண்ணத்தில் எழுதுகிறார்கள். தங்கள் கெட்டிக்காரத்தனத்தைக் காட்டுவதில்தான் அக்கறை காட்டுகிறார்கள். சில பேட்டியாளர்களும் இந்த ரகம்தான். ஒரு உதாரணம் தருகிறேன். (ஆங்கிலத்தில் இருப்பதற்கு மன்னிக்கவும்.) சார்த்ரேயிடம் ஒரு பேட்டியாளர் கேட்டார்: Borrowing the terms employed by the structuralists, one might say that signification is the product of the articulation of signifiers, themselves considered as non-articulated constituent elements; signification would be the unit of meaning which brings about the unification of the discontinuous data of your verbal material.

இதற்கு சார்த்ரே சொன்ன பதில்: "எக்ஸாக்ட்லி!"

✖ பிரேமா சந்தானம், பாரக்பூர்

கே: கல்யாணம் செய்து கொள்ளாமல் இருந்தால் வாழ்க்கை வீண் என்று கூறுவீர்களா?




ப: மாட்டேன். எத்தனை பேர் திருமணம் செய்து கொள்ளாமல் தங்களுடைய வாழ்க்கையை மட்டுமல்ல; உலகத்தினரின் வாழ்க்கையையும் முன்னேற்றி இருக்கிறார்கள்! எத்தனையோ உதாரணங்களைக் கொடுக்க முடியும். நியூட்டனைப் பற்றிக் கேள்விப்பட்டு இருக்கிறீர்களா? பிறப்பதற்குச் சில மாதங்களுக்கு முன்பே தந்தையை இழந்தார்; சில மாதங்களில் அம்மா திருமணம் செய்து கொண்டு விட்டாள். பாட்டி வீட்டில் இருந்த அவர் கிட்டத்தட்ட அனாதை மாதிரி வளர்ந்தார். 85 வயதுவரை வாழ்ந்த இந்த மேதை திருமணமே செய்து கொள்ளவில்லை. சுமார் 300 வருஷங்களுக்கு முன்பு வாழ்ந்த அவர், அந்தக் காலத்திலேயே சூரியனின் எடையைக் கணக்கிட்டார். கல்யாணத்துக்கும் பயனுள்ள வாழ்க்கைக்கும் சம்பந்தம் இல்லை

✖ எஸ் எஸ். மணி, திருவனந்தபுரம்

கே: "இந்திரா காந்தியிடம் உங்களுக்கு பிடிக்காதது என்ன?" என்று அரசுவிடம் கேட்டால் என்ன பதில் கிடைக்கும்?

ப: அரசு என்ன பதில் சொல்லியிருப்பார் என்று ஊகிக்க எனக்குத் திறமைபோதாது. ஆனால் அரசு என்ன பதில் சொல்லியிருப்பார் என்று கடுகு என்ன பதில் சொல்லக் கூடும் என்று ஊகிக்க அரசு திறமை படைத்தவர். ஆகவே அவரைக் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்!

பரிசு பெறுபவர்:

தேவி தெய்வநாயகம்,
1, கன்னி மூல மேலரத் வீதி,
கல்லிடைக் குறிச்சி - 627416

✖ ஜெயில் உப்புமா நல்லா இருக்குமோ என்னமோன்னு விட்டுலே செஞ்சு கொண்டாந்திருக்கேன் என்று கமல் கூறவும் இல்லை; இது சிறைச் சாலையும் இல்லை! ஸ்டுடியோ செட்தான். டீசிஸைப் பெற்றுக் கொள்பவர், ....கரெக்ட்! இளையராஜாவே தான்.

● நடு ரோட்டில் நின்றுகொண்டு டெலிபோன் செய்ய முடியுமா? — பொதுத் தொலைபேசி இல்லாமல்? ரஜினியால் முடியும்! காரணம் புதிதாக வயர்லெஸ் டெலிபோன் ஒன்றை வெளி நாட்டிலிருந்து வாங்கியுள்ளார். இந்தத் தொலை பேசியில் 30 கிலோ மீட்டர் சுற்றளவில் யாருடன் வேண்டுமானாலும் பேசலாம். இந்த மாதிரி தொலைபேசிகள் சென்னையில் வேறுஇரண்டு சினிமாப் புள்ளிகளிடமும் உள்ளன. ஒருவர் கே. ஆர். விஜயா, மற்றவர் பாலாஜி.

● இயக்குனர் மகேந்திரன் மகன் ஜான், ஓவியர் ஜெயராஜைப் போலவே படம் வரைகிறான். அதுவும் சாதாரணப் படங்கள் அல்ல. கவர்ச்சிப் படங்களைத்தான்! ஜெயராஜே பார்த்துப் பாராட்டினாராம். சந்தோஷம் தாங்கவில்லை அவனுக்கு! மகேந்திரனுக்கும் ஒருவேளை ஓவியம் வரையத் தெரிந்திருக்குமோ?

● நடிகை சரிதா ஏ. வி. எம். படப் பிடிப்புத் தளத்தில் ஓர் ஓரமாக உட்கார்ந்திருந்தார். ''ஏன் வருத்தமாக இருக்கிறீர்கள்?'' என்று கேட்டபோது, ''இந்த மாதக் கடைசியில் ஆந்திரா போகப் போகிறேன் சார். அதுதான் வருத்தம்'' என்றார். ஆந்திரா போவதில் வருத்தம் என்ன இருக்கிறது? புரியாமல் நான் அவரைப் பார்த்தேன். ''அங்கெல்லாம் சாதாரணமாகவே வெயில் அதிகம். இப்பொழுது கோடைக் காலம் வேறு. அங்கே பதினைந்து நாள் படப் பிடிப்பு நடந்தால் வறுத்த கருவாடு ஆகிவிடுவேன்.'' என்றார். அவர் சோகம் நியாயமானதுதான். கோடை வெய்யிலுக்கு ஏற்ப ஊட்டி, கொடைக்கானல், ஸிம்லா, காஷ்மீர் என்று எங்காவது ஷூட்டிங் இருக்கப்படாதோ?

✖ மகேந்திரனின் மகன் ஜான்



● ''ராஜ பார்வை படத்தை நீங்கள் தான் இயக்கினீர்கள் என்று சினிமா வட்டாரங்களில் பரவலாகப் பேசப்படுகிறதே உண்மையா?'' என்று கேட்டதற்கு கமலஹாசன் ''கண்டிப்பாக இல்லை. கதை, வசனத்தை நானும் பாரதியும் (இவர் பாரதிராஜா அல்ல. ஆனால் அப்படி வளரத் துடித்துக் கொண்டிருப்பவர்) எழுதியுள்ளோம். டைரக்ஷனை சிங்கீதம் சீனிவாச ராவ்தான் கவனிக்கிறார். ஒரு பாடலுக்கான நாட்டியக் காட்சியை மட்டும் நானும் நடன ஆசிரியர் ரகுவுமே முடித்து விட்டோம் என்ற ஒரே காரணத்தினால் டைரக்ஷன் பொறுப்பு முழுவதையுமே நான் ஏற்றது போல் தப்பபிப்பிராயம் பரவி விட்டது'' என்றார்.

— சலன்

# சரிதாவின் தவிப்பு!







# ஒரு சரித்திரம் பிறக்கிறது

× ஜலகண்டேசுவரர் கோவிலின் வாசல்
× ஜலகண்டேசுவரர் கோவிலும், கோவிலைச் சுற்றி உள்ள கோட்டையும் அகழியும். -எஸ். ஹாரிஸன்
× 'சத்வாச்சாரி'யில் வைக்கப்பட்டிருந்த சிவலிங்கம்

**நீ**ரில்லா ஆறு: அரசனில்லாக் கோட்டை: சாமி இல்லாக்கோயில் என்று வேலூர் பற்றிக் குறிப்பிடுவார்கள். இதில் ஒரு குறை நீங்கி விட்டது. வேலூரில் மக்களெல்லாம் ஒன்று திரண்டு பல வருடங்களாக சிலை இல்லாமலிருந்த ஜலகண்டேசுவரர் ஆலயத்துக்கு இம் மாதம் பதினாறும் தேதி சிவலிங்கத்தைக் கொணர்ந்து பிரதிஷ்டை செய்து விட்டார்கள். இந்தத் திடீர் பிரதிஷ்டைக்கு அவசியம் என்ன என்று அறிய வேலூர் சென்றால் ஒரு பகீரதப் பிரயத்தனமே நடந்திருக்கிறது எனத் தெரிய வருகிறது.

1942ம் ஆண்டிலிருந்தே வேலூர்க் கோட்டையில் உள்ள இந்த ஜலகண்டேசுவரர் ஆலயத்துக்குச் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்ய முயற்சிகள் நடைபெற்றுக்கொண்டு தான் வந்தன. ஒவ்வொரு முறையும் தோல்விதான். காமராஜரும் பக்தவத்சலமும் கூட தங்கள் ஆட்சி காலத்தில் முயன்று பார்த்து விட்டு விட்டதாகக் கூறப்படுகிறது. திருமுருக கிருபானந்த வாரியார் அவர்களின் துணை கொண்டு 1965ஆம் வருடம் இதே முயற்சி நடந்தது. ஆனால் தொல் பொருள் இலாக்கா சரித்திரச் சின்னங்களை அப்படி அப்படியே பாதுகாக்க வேண்டும் என்ற எண்ணத்தில் சிவலிங்கமோ, சிலையோ கோவிலுக்குள் வர அனுமதிக்கவில்லை. அனுமதி கிடைக்கும் என்ற நம்பிக்கையில் சுமார் 86,000 ரூபாய் பணத்தை வசூலித்து விட்டார்கள். அனுமதி வழங்கப்படாத நிலையில் அப்பணத்தை என்ன செய்வது என்று யோசித்துக் கடைசியில் மக்களுக்குப் பயன்பட ஒரு திருமண மண்டபத்தைக் கட்டி விட்டார்கள்.

அடுத்தடுத்து ஏற்பட்ட ஏமாற்றங்கள், ''மயிலே மயிலே என்றால் இறகு போடாது'' என்ற எண்ணத்தை உருவாக்கியிருக்கிறது. மக்கள் ஆட்சியில் மக்கள் சக்தியைத் திரட்டித்தான் காரியத்தைச் சாதிக்க வேண்டும்; மக்கள் சம்மதித்தால் தடுப்பார் இருக்க முடியாது என்ற யோசனையும் பிறந்திருக்கிறது. திட்டத்தை ரகசியமாகவே காப்பாற்றி வந்து திடீரென்று ஒரு நாள் செயல்பட்டு காரியத்தைச் சாதித்து விட்டார்கள்! சரியான பக்திச் சூழ்நிலை உருவாக வேண்டும் என்பதற்காகவே வருண ஜபம் தொடங்கப்பட்டது.

இரண்டு மாதங்களுக்கு முன்பே வேலூரில் ஒரு முக்கிய பிரமுகரான கே. எஸ். மணி, 'ஜலகண்டேசுவரர் ஆலயத்துக்குச் சொந்தமான சிவலிங்கம் சத்வாச்சாரி என்னும் இடத்தில் இருப்பதாகத் தெரிகிறது: அதை அந்த இடத்திலிருந்து கொணர்ந்து சிலை இல்லாத ஆலயத்தில் பிரதிஷ்டை செய்து கோயிலுக்குச் சிறப்புச் சேர்க்க வேண்டும்'







- கோயில் பிரகாரத்தைச் சுற்றி வந்து பார்வையிடுகிறார் கலெக்டர் (கறுப்புக் கண்ணாடி) திருநீறு அணிந்து முன்னால் வருபவர் ஏ. எஸ். ஏ. பரமசிவம்; இடதுபுறம் கே. எஸ். மணி
- கே.எஸ். மணி, கிருபானந்தவாரியார்
- கலெக்டர் கங்கப்பா

என்று கலெக்டருக்கு ஒரு மகஜர் கொடுத்திருந்தார். அதற்கான ஆதாரங்களையும் தமது கடிதத்துடன் இணைத்திருந்தார். சத்வாச்சாரி என்ற இடம் வேலூருக்கு வெளியே இருக்கிறது. மகஜரின் அடிப்படையில் கலெக்டர் தொல்பொருள் இலாகாவுக்கும், மற்றும் இது சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கும் எழுதிப் பதிலை எதிர்பார்த்திருந்தார். எப்பொழுதும் போலவே இந்த முறையும் பதில் ஏதும் இல்லை.

இம்மாதம் 15ந் தேதி இரவு சத்வாச்சாரியில் உள்ள சிவலிங்கத்தை எடுத்துக்கொண்டு வந்து கோட்டையில் உள்ள ஆலயத்தில் பிரதிஷ்டை செய்வதென்று நாலு பேர் ரகசிய முடிவெடுத்தார்கள். கடைசி நேரத்தில் உதவிக்கு ஆட்களை அழைத்து இரவு 10 மணியிலிருந்து காலை 5.45 வரை சுமார் 100 பேர்கள் சிரமப்பட்டு 42 அங்குலம் சுற்றளவும் ஐந்து அடி உயரமுமுள்ள சிவலிங்கத்தைத் தூக்க முடியாமல் தூக்கி லாரியில் வைத்துக் கொண்டு வந்து விட்டனர். ராகுகாலத்துக்குப் பிறகு பிரதிஷ்டையும் செய்தனர். சிவன் வந்த பாதையிலேயே சக்தியான அகிலாண்டேகவரியும் வந்து 18ந் தேதி காலை பிரதிஷ்டை செய்யப்பட்டாள். சுவாமியும் அம்மனும் வருவார்கள் என்று எதிர்பார்த்தே தானோ என்னமோ கோயிலுக்குள் மேல் விதானங்கள் புதிதாக பெயிண்ட் அடிக்கப்பட்டும் காட்சி தந்தன!

சரித்திர காலத்தில் வேலூர்க் கோட்டையில் உள்ள அந்தக் கோயில் மொகலாய அரசனின் தாக்குதலுக்கு உள்ளாயிற்று. மொகலாய வீரர்களால் சிற்பங்களும் நகைகளும் களவாடப்பட்டன. அந்தப் போரில் ஈடுபட்டிருந்த இந்து சிப்பாய்கள் எது போனாலும் மூலவர் அழியக் கூடாது என்று சிவ லிங்கத்தைச் சத்வாச்சாரி என்ற இடத்தில் பத்திரப்படுத்தி விட்டுச் சென்றனர். சில வருடங்களுக்குப் பிறகு அந்த இடத்தில் வசித்து வந்த செட்டியார் பரம்பரையினர் சிவலிங்கத்தைப் பார்த்து அதற்கு ஒரு சிறு கோயில் அமைத்து வழிபட்டு வந்தார்கள். அந்தச் செட்டியாரின் பரம்பரையில் வந்தவர் தான் இன்று இருக்கும் சிவலிங்கச் செட்டியாரும் அவர் மகன்களும் அன்புச் சகோதரர்களும். இவர்களும் சரி, சத்வாச்சாரியில் வசிக்கும் இதர மக்களும் சரி, சிவலிங்கம் கோட்டைக் கோயிலுக்குப் போவதைத் தடுக்கவேயில்லை. மாறாக மகிழ்ச்சியோடு ஒப்புக்கொண்டு கையெழுத்தும் இட்டுத் தந்தனர். சிவலிங்கம் ஏழு நூற்றாண்டுகளுக்கும் முற்பட்டதாகக் கருதப்படுகிறது.

''ஊருக்கு மேற்புறம் சிவலிங்கம் இருக்கக் கூடாது என்பார்கள். வேலூருக்கு மேல்புறம் சத்வாச்சாரி கோயில் இருப்பதும் அதில் சிவலிங்கம் இருப்பதும் அவ்வளவாகச் சரியில்லை; இப்பொழுது சிவலிங்கம் கோட்டைக்கு வந்து விட்டதால் சத்வாச்சாரி கோயிலை விநாயகர் கோவிலாக்க உத்தேசித்திருக்கிறோம். காரணம் முன்பே அங்கு விநாயகரும்முருகனும் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறார்கள். அங்கிருக்கும் விநாயகருக்கு ஜலகண்ட விநாயகர் எனப் பெயர் வைக்க இருக்கிறோம்'' என்று கூறினார் கோட்டைக் கோயிலின் ஜலகண்டேகவர சிவலிங்கத்துக்கு ஆரத்தி காண்பிக்கும் ஞான சக்தி குருக்கள்.

ஜலகண்டேகவரர் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள கோட்டைக் கோயிலுக்குள் நுழைவதற்குமுன்பு வாசலில் பார்த்தால் பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருக்கிறது ஆர்.எஸ்.எஸ். கொடி. 'அவர்கள் தான் சார் எல்லாவற்றுக்கும் சூத்ரதாரிகள்' என்றார்கள் பலர் — ஆனால் ரகசியமாக!



சாப்பிடுபவர்: “ஏன் சர்வர்! காப்பி கேட்டா வெறும் டபராவை வச்சிட்டுப் போறியே...!”

சர்வர்: “நல்லா எட்டிப் பாருங்க ஸார்...! காப்பி டம்ளர் உள்ளே இருக்கும்!”

- பூபால்சிங்

---

வேலூரில் தலைமையகத்தைக் கொண்டிருக்கும் ஆட்சித் தலைவர் கங்கப்பா சிவலிங்கப் பிரதிஷ்டை நடந்த உடனே அன்று மாலையே கோட்டைக் கோயிலுக்குச் சென்று பார்வையிட்டிருக்கிறார். அவரையும் சந்தித்து விடலாம் என நான் சென்றபோது கோயில் சம்பந்தமாக ஒரு குட்டி மீட்டிங் நடந்து கொண்டிருக்கிறது என எனக்குச் சொன்னார்கள். அது முடிந்தவுடன் நான் கலெக்டரைப் பார்த்தேன். ''மக்கள் ஆட்சியில் மக்கள் விருப்பம்தானே என் விருப்பமாக இருக்க முடியும்? மக்கள் ஏகமனதாக முடிவெடுத்த பிறகு நான் எப்படிக் குறுக்கே நிற்பது? சட்டப்படி பார்த்தால் இது குற்றமல்ல. ஏன் என்றால் எடுத்த இடமான சத்வாச்சாரி மக்கள் கையெழுத்திட்டு ஒப்புதல் அளித்திருக்கிறார்கள். கொண்டு வந்து வைக்கப்பட்ட இடத்திலும் வைக்கப்பட்டபோது யாரும் தடையோ ஆட்சேபணையோ எழுப்பவில்லை. ஆனால் இனி பூஜைகள் எல்லாம் முறைப்படி நடக்குமா? இங்குதான் சிக்கலும் சட்டமும் நுழைகிறது. எல்லாம் நல்லபடியாக முடிந்துவிட வேண்டும் என்று பிரார்த்தித்துக்கொள்கிறேன்'' என்றார்.

தொல் பொருள் இலாகா, கோட்டைக் கோயிலின் புராதனத் தன்மையைக் காக்கும் பொருட்டு அதில் புதிதாக வந்துள்ள விக்கிரகங்களை வெளியேற்ற வேண்டும் என்றும், அதற்குக் கலெக்டர் உதவ வேண்டும் என்றும் கோரியிருக்கிறது. மாவட்ட ஆட்சியாளருக்குத் தர்மசங்கடமான நிலைதான். எனவே எனது சில கேள்விகளுக்கு அவர் பதில் கூறாமல் நழுவியதிலும் வியப்பில்லை. ஆனால் ஒன்று, பழைய சரித்திரம் ஒரு புறமிருக்க இன்று புதியதொரு சரித்திரம் படைக்கப்பட்டிருக்கிறது என்பதையும், அதையும் காக்க வேண்டியதுதான் என்பதையும் தொல்பொருள் இலாகா புரிந்துகொள்வது நல்லதல்லவா?

முதல் நாள் மாலை கலெக்டர் கோயிலுக்குச் சென்றபோது மக்களின் விருப்பத்தை நன்றாகவே உணர்ந்திருப்பார். கூட்டமாவது கூட்டம்! அறுபத்து மூவர் திருவிழாவைப் போல் ஜே ஜே என்று இருந்தது. பல முஸ்லிம்கள் தம்மை அணுகி நன்றி கூறியது தமது இதயத்தை நெகிழ்வித்ததாகக் குறிப்பிட்டார் கலெக்டர். பக்த கோடிகள், இப்போது மும்முரமாக, தூர்ந்து போன திருக்குளத்தை வெட்டிச் செப்பனிட்டுக் கொண்டிருக்கிறார்கள். இதனிடையில் தொல் பொருள் ஆராய்ச்சி இலாக்கா உதவி சூபரின்டெண்டெண்ட் பூனாச்சா வேலூருக்கு வந்துவிட்டார், விசாரணை நடத்தவும் தமது இலாக்காவின் உரிமைகளை நிலைநாட்டிக் கொள்ளவும்! சும்மா விடுவார்களா ஆஸ்திக மக்கள்! பூர்ண கும்ப மரியாதை வரவேற்பு தந்து அவரை அன்பால் திணர அடித்துவிட்டார்கள்!

கலெக்டரைச் சந்தித்த பூனாச்சா, ''மக்கள் பிரதிநிதிகளை அழைத்துக் கூட்டம் நடத்தினீர்களா முடிவு என்ன?'' என்று விசாரித்தார்.

கலெக்டர் அளித்த பதில்: ''இனி எந்தச் சிலையும் கோயிலுக்குள் போகாது; எந்தச் சிலையும் வெளியேயும் வராது! மக்கள் தலைவர்கள் உறுதியளித்திருக்கிறார்கள்!''

சாமர்த்தியமான இந்தப் பதிலைக் கேட்டபின் எனக்கு ஜலகண்டேசுவரர் பற்றிய கவலை ஓடியே போய்விட்டது!

மற்றவர்களைக் காப்பாற்றும் ஜலகண்டேசுவரருக்குத் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளத் தெரியாதா என்ன?

—சலன்

---



## சரத்காலம்

இராகுலதாசன்

கூரையின் வழியே
ஊசி இழையாய்
உள்ளே இறங்கும்
மழையின் துளிகள்
அம்மா வடிக்கும்
கண்ணீர்க் கங்கை
மழையின் நீரோடு
இரண்டறக் கலக்கும்
எழுது பலகையைத்
தலையில் ஏந்தி
மழையைத் தாங்கும்
மழலைக் குழந்தை
விட்டுப் பாடம்
அழிந்தது என்று
பலகை பறிக்கும்
அண்ணன் அழுகை
விளக்குச் சுடரும்
வீழ்ந்த துளியும்
ஒன்றை யொன்று
விழுங்கிய பின்னர்
இல்லம் எங்கும்
இருளின் சூழ்ச்சி!

மவுண்ட் ரோடிலும் எழும்பூரிலும் ஒவ்வொரு ஆபீஸாக வேலை தேடி ஏறி இறங்கிய களைப்பில் சோர்ந்துபோய், சீட்டின் பின்புறத்தில் முதுகு அழுந்தத் தலையைச் சாய்த்து உட்கார்ந்து கொண்டிருந்தான் சுப்பு.

மயிலாப்பூர் குளம் ஸ்டாப்பில் சடக்-கென்று நின்றது பஸ்.

இடது பக்கம் திரும்பி ஜன்னல் வழியாக தெப்பக்குளத்தையும் கோபுரத்தையும்பார்த்துக்கொண்டிருந்தபொழுது, உள்ளே ஏறி நுழைந்த கூட்டத்தில் பளிச்சென்று கண்ணில் பட்ட அந்த முகம் — யார் அது புவனாவா?

— — க —

சு — —

— — ப

# அய்க்கண்

சீட்டில் நிமிர்ந்து உட்கார்ந்து, சற்றே எழுந்து நின்று அந்த முகத்தைப் பார்த்தான் சுப்பு.

வியப்பாய் விரிந்த அவனுடைய கண்களில் பட்டுப் புடவை வட்டமிட்டிருந்த அவளது சங்குக் கழுத்திலே புரண்ட தாலிக் கயிறும் தங்கச் சங்கிலியும் தெளிவாகப் பட்டன.

ஓ!...அவனுடைய புவனாவுக்குத் திருமணம் நடந்து விட்டதா?...

சீ! என்ன பைத்தியக்காரத்தனம்! 'அவனுடைய புவனா என்று சொல்வதற்கு அவனுக்கு என்ன அருகதை இருக்கிறது?

கடந்த மூன்று ஆண்டுகளில் அவன் என்ன ஆனான், எங்கிருக்கிறான் என்பதைப் பற்றி கவலையே படாத அவனுக்கு, புவனா மேல் உரிமை கொண்டாட என்ன உரிமை இருக்கிறது?

அவள் கையிலிருந்த வெள்ளிக் கூடை, கோயிலில் தரிசனம் செய்துவிட்டு வருகிறாள் என்பதைக் காட்டியது.

''ஆர். கே. நகர் போஸ்டாபீஸ்'' என்று டிக்கட் கேட்ட அவளது குரல் சுப்புவின் காதுகளில் ஜில்லென்று விழுந்து எதிரொலித்தது.

அந்தக் குரல்... அந்த இனிமை...

ஆயிரம் குரல்களிலே அவனுடைய குரலை, கண்ணை மூடிக்கொண்டு அவனால் அடையாளம் சொல்ல முடியும்.

எத்தனை வருஷப் பழக்கம்?

கிராமத்தில் இரு குடும்பங்களும் பக்கத்து வீடுகள். சுப்புவின் குடும்பம் போல், புவனாவின் குடும்பமும் ஏழைக் குடும்பம் தான்.



புவனாவின் அப்பா ரங்கசாமி கடைத் தெருவில் ஒரு சிறு பெட்டிக் கடை வைத்திருந்தார். அவருக்கு ஏழெட்டுக் குழந்தைகள். மூத்தவள் புவனா. வீட்டிலே தினசரி அடுப்புப் புகைவதற்காக அம்மா நாலைந்து வீடுகளில் பாத்திரம் பண்டம் தேய்த்து, மாவரைத்துக் கொடுத்துச் சம்பளம் வாங்கி வருவாள்.

புவனா வீட்டு வேலைகளையெல்லாம் பார்த்துக் கொண்டாலும், படிப்பிலும் கெட்டிக்காரி. சுப்புவோ நேர் எதிர். மூன்று நான்கு வயது மூத்தவனாகிய அவனை, எஸ். எஸ். எல். ஸி. வருவதற்குள் எட்டிப் பிடித்து 'கிளாஸ்மேட்' ஆகிவிட்டாள் புவனா.

அவர்கள் எஸ். எஸ். எல். ஸி. படித்துக் கொண்டிருந்தபோது, எதிர் வீட்டுக்குக் குடிவந்த ரெவின்யூ இன்ஸ்பெக்டர் சதாசிவத்தின் மகன் சேகர் சுப்புவின் எதிர்காலக் கனவுக் கோட்டைகளைத் தகர்த்தெறியும் வெடியாக வந்து சேர்ந்தான்.

ஆரம்பத்தில் அந்தக் குடும்பத்துக்கு வேண்டிய உதவிகளையெல்லாம் சுப்புவாகவே முன்வந்து செய்தான். புதிதாக வந்த அந்தக் குடும்பத்தார்க்கு, கிராமத்தில் கிடைத்த முதல் துணை அவன்தான்.

சேகர், கல்லூரியில் பி. எஸ். ஸி. படித்துக் கொண்டிருந்தான். தன்னுடைய ஓய்வு நேரங்களில் சுப்புவுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தான் சேகர். அவனுடைய திறமையால் இதுவரை புரியாமல் இருந்த பல பாடங்கள் தனக்குப் புரிய ஆரம்பித்ததைப் பார்த்துத் தன்னையே நம்ப முடியாமல் தடுமாறினான் சுப்பு.

''அண்ணே! ரொம்ப அருமையாய்ப் பாடம் சொல்லிக் கொடுக்கிறீங்க... கிளாஸிலே தலைக்கு மேலே போய்க்கிட்டிருந்த பல விஷயங்கள் இப்போதான் தலைக்குள்ளே நுழையுது. எங்கபக்கத்து வீட்டிலே புவனான்னு ஒரு பொண்ணு இருக்குது. அதுவும் என்னோடே கிளாஸிலே படிக்குது. நீங்க எனக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கிறபோது அதுக்கும் சேர்த்துச் சொல்லிக் கொடுத்தீங்கன்னா, அதுக்கு ரொம்ப உதவியாயிருக்கும்....''

''ஓ.கே. நாளைக்குக் கூட்டிக்கிட்டு வாயேன்'' என்று அனுமதியளித்தான் சேகர்.

மறுநாள் முதல் சேகரிடம் சுப்புவும், புவனாவும் சேர்ந்து டியூஷன் படிக்க ஆரம்பித்தார்கள்.

நாளடைவில் புவனாவின் உள்ளம் சேகரிடம் லயித்து விட்டதைப் புரிந்துகொண்ட சுப்பு திகைத்தான்.

அந்த ஆண்டு முடிவில் சேகரின் அப்பாவுக்குக் காரைக்குடிக்கு டிரான்ஸ்பர் ஆகும் போலிருந்தது. அவர்கள் ஊரை விட்டுப் போகும் முன்பே, சேகரிடம் தன் அன்பைத் தெரிவிக்கத் துடித்தாள் புவனா.

அதற்கு 'என்ன செய்யலாம்' என்று புவனா தன் பால்ய தோழனை யோசனை கேட்டபோது அவனது நெஞ்சம் அதிர்ச்சியில் வெடித்துச் சிதறியது.

அவளிடம் என்னென்னவோ எதிர்பார்த்து ஏமாந்த உள்ளம், இதுவரை தனக்குள்ளே வரைந்து வைத்திருந்த காதல் ஓவியங்களை சட்டென்று அழித்துக் கொண்டு விட்டது.

இனி, புவனா அவனுடைய தோழிதான்; தோழி மட்டும்தான்!...

தன் உள்ளத்தில் அணைகட்டித் தேக்கி வைத்திருந்த காதல் உணர்வை வெட்டி வடித்துவிட்டு, மீண்டும் பழைய பால்ய சிநேகிதனாக மாறினான் சுப்பு.

''இதுக்கு ஏன் இவ்வளவு யோசிக்கிறே புவனா? ஒரு தாளை எடு. விடுவிடுனு ஒரு லவ் லெட்டர் எழுதிக் குடு. நான் சேகர் கிட்டே கொண்டு போய்க் கொடுத்திடறேன். உன்னை மாதிரி ஓர் அழகான பெண்ணைக் காதலிக்கிறதுக்கு அவருக்குக் கசக்குமோ''?

புவனாவுக்கு 'திக்' என்றது. 'காதல் கடிதம் எழுதலாமா?'

''ஏன் இப்படி முழிக்கறே? பேப்பர், பேனாவை எடு. நானே டிக்டேட் பண்றேன். நீ பேசாம எழுது'' என்று நிறைய காதல் கடிதம் எழுதி அனுபவப்பட்டவன் போல் சொல்ல ஆரம்பித்தான் சுப்பு.

அன்புள்ள காதலர் சேகர் அவர்களுக்கு,

வணக்கம். நான் உங்களைக் கண்டவுடனேயே தெய்வீகக் காதல் கொண்டு விட்டேன். நீங்கள்தான் என் வாழ்வு. உயிர் எல்லாம். உங்களையே என் கணவராக வரித்து, உங்களை அடையத் தினசரி கோயிலில் பிரார்த்தனை செய்து வருகிறேன். நீங்கள் இல்லாவிட்டால் எனக்கு வாழ்க்கையே இல்லை. உடனே பதில் எழுதுங்கள்.

ஆர். புவனா

சுப்பு ஆர்வத்துடன் சொல்லச் சொல்ல அப்படியே எழுதி விட்டாள் புவனா.

''நீ கவலைப்படாதே புவனா! இந்த லெட்டரை நானே சாயந்தரம் சேகர் கிட்டே கொடுத்து, உனக்குச் சந்தோஷமான பதில் வாங்கிக்கிட்டு வர்றேன். உன் தெய்வீகக்

---

**அவன்:** அதோ போறாரே அந்த ஆளு சரியான கஞ்சப் பேர்வழி.

**இவன்:** அப்படியா?

**அவன்:** ஆமாம். மீசை கூட இட்லர் மீசைதான் என்றால் பார்த்துக்கோயேன்.

- கோபாலகிருஷ்ணன்



ஆசிரியர் : வலதுகை அஞ்சு விரலில் ரெண்டுவிரல் போனால் மீதி எத்தனை விரல்?

பையன்: நாலு விரல் சார்!

ஆசிரியர்:- எப்படிடா?

பையன்:- எனக்கு மொத்தம் ஆறு விரலாச்சே சார்!

-கடலூர் கன்னியப்பன்



காதல் நிச்சயம் நிறைவேறும் பார்!'' என்று தைரியம் சொன்னான் அவன்.

ஆனால் சுப்பு நினைத்தபடி செய்ய அவசியமில்லாமல் போய்விட்டது.

அன்று இரவு, சென்னையிலிருந்து ரங்கசாமிக்கு எக்ஸ்பிரஸ் தந்தி வந்து குடும்பமே அவசரமாகப் பட்டணத்துக்குப் புறப்பட்டுப் போனார்கள். அங்கே ஏதோ பலசரக்குக் கடை வைத்திருந்த ரங்கசாமியின் தம்பி திடீரென்று விபத்தில் காலமாகி விட்டாராம். மனைவி, பிள்ளை குட்டி இல்லாத அவருக்கு எல்லாக் காரியங்களும் ரங்கசாமி குடும்பத்தார் போய்த்தான் செய்யவேண்டியிருந்தது.

இரவோடு இரவாகப் புறப்பட்டுப் போன அவர்கள் பிறகு கிராமத்துக்குத் திரும்பவேயில்லை.

சில மாதங்கள் கழித்து சேகரின் அப்பாவும் காரைக்குடிக்கு டிரான்ஸ்பராகிப் போய் விட்டார்.

**ப**ஸ், மந்தைவெளித் திருப்பத்தில் குலுங்கித் திரும்பி நின்றது. அங்கே இறங்கவேண்டிய சுப்பு இறங்கவில்லை.

பட்டணத்துக்கு வேலை தேடி வந்து, கடந்த ஒரு மாதமாக அலைந்து கொண்டிருந்தான் அவன். வேலை தேடும் வேலையே, நிரந்தரமாகிவிடும்போலிருந்தது!

**ஆர்.**கே.நகர் போஸ்டாபீஸில் இறங்கி, திரும்பிப் பார்க்காமலே நடந்து கொண்டிருந்தான் புவனா. சற்றுப் பின்னாலே அவனுடைய கிராமத்துப் பால்ய ஸ்நேகிதன் வருவான் என்று அவனால் நினைத்துக்கூடப் பார்க்க முடியுமா?

ராஜா அண்ணாமலைபுரத்தின் ஒரு கிராஸ் தெருவில் கம்பீரமாக நின்ற ஒரு பங்களாவுக்குள் நுழைந்தான் புவனா.

அந்தப் பங்களாவில் செல்வ வளம் கொழிப்பது தெரிந்தது.

நல்ல வேளையாக அந்தப் பங்களாவுக்குப் பக்கத்தில் ஒரு பெட்டிக் கடை இருந்தது. கடைக்காரனிடம் ஒரு பீடிக் கட்டும் தீப்பெட்டியும் வாங்கி, ஒரு பீடியைப் பற்ற வைத்துக் கொண்டே பங்களாவைப் பற்றிச் சாமர்த்தியமாக விசாரித்தான் சுப்பு.

அதிலே இருப்பவர், ஒரு பைனான்ஸ் கார்ப்பரேஷனிலே மானேஜராம்; ஆயிரக் கணக்கில் சம்பளம். காலையிலே ஸ்கூட்டரிலே ஆபீஸ் போய், சாயந்திரம்தான் திரும்பு வாராம். அவருடைய மனைவி தினசரி கோவிலுக்குப் போய் வருகிற பக்தையாம்.

'இந்த அழுக்கு உடையுடனும் களைப்புடனும் புவனாவைப் போய்ப் பார்க்க வேண்டாம். நாளை வந்து சந்திக்கலாம்' என்று தீர்மானித்துக் கொண்டு திரும்பினான் சுப்பு.

மறுநாள் காலை தன்னிடம் உள்ள நல்ல சட்டை, வேட்டியாகப் பார்த்து அணிந்து கொண்டு புவனாவின் பங்களாவுக்கு வந்தான்.

வெளிக் கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்து, வாசலில் இருந்த 'காலிங் பெல்'லை அழுத்தினான்.

கதவைத் திறந்த புவனா, எதிரே நிற்கும் சுப்புவைப் பார்த்து அப்படியே திகைத்துப் போய்விட்டாள்:

''யாரது, சுப்புவா?... நம்பவே முடியலியே!'' என்று ஆச்சரியத்தில் விழிகளை மலர்த்தினான் புவனா.

'சுப்புதான்: ஆனால் பழைய சுப்பு இல்லை; நீ நம்பவே முடியாதபடி மாறிப்போய்விட்ட மிஸ்டர் சுப்பு....' என்று மனதிற்குள் சொல்லிக் கொண்டான் அவன்.

''என்ன சுப்பு, எப்போ மெட்ராஸ் வந்தே? இங்கே ஏதாவது வேலையா?'' என்று அன்புடன் கேட்டான் புவனா.

'இனிமேல்தான் வேலையை ஆரம்பிக்க வேண்டும்' என்று மனத்துக்குள் கறுவிக் கொண்டான் அவன்.

''புவனா! உன்னைச் சந்திக்கிற சந்தர்ப்பம் தற்செயலாய் ஏற்பட்டுச்சு... இந்த வசதியான நிலையிலே உன்னைப் பார்க்க எனக்கு ரொம்பச் சந்தோஷமா இருக்கு...''

''எல்லாம் கடவுள் கிருபை சுப்பு. இங்கே வந்து சித்தப்பாவோட கடையைத் தொடர்ந்து அப்பா நடத்தினார். நல்ல காலம் வந்திட்டது. இப்போ அந்தக் கடையே பெரிய ஸ்டோர்ஸாகி, நல்லா வியாபாரம் நடத்துக்கிட்டிருக்கு... வசதி வந்திட்டதாலே என்னையும் நான் விரும்பின நல்ல இடத்திலே கட்டிக் கொடுக்க முடிஞ்சது.''

''இவ்வளவு உயர்ந்த நிலைக்கு வந்தப்புறமும் என் மாதிரி ஏழைகளை ஞாபகம் வச்சிருக்கியே?'' என்று இடக்காகச் சொன்னான் பால்ய சிநேகிதன்.

''சே! என்ன சுப்பு, இப்படிப் பேசறே? பணம் வந்திட்டதாலே பழசை யெல்லாம் மறந்திடணுமா என்ன?''



''என் மனைவியும் நானும் உடலால் பிரிந்திருந்தாலும் உள்ளத்தால் ஒன்றுயிருக்கிறோம்!''

''எப்படி?''

''நேற்று நான் ஆபீஸுக்கு அரைநாள் லீவு போட்டுட்டுப் புதுப்படத்துக்கு மாட்னி போனால் அங்கே என் மனைவியும் எனக்குத் தெரியாமல் தியேட்டரில் உட்கார்ந்திருக்கிறாள்!''

- அ. இராமதாஸ்

''மறக்க நினைச்சாலும், எல்லாத்தையும் மறந்திட முடியுமா என்ன?... கிராமத்திலே நாம பழகினதும் படிச்சதும்...'' என்று அவன் வலை விரிக்க ஆரம்பித்தபோது—

உள்ளே இருந்து விசில் சப்தம் கேட்டது.

''கொஞ்சம் இரு, கப்பு! குக்கர் சப்தம்; அதை எடுத்து வச்சிட்டு உடனே வந்திடறேன்'' என்று உள்ளே ஓடினாள் புவனா.

வரட்டும். அவள் வந்ததும் பளிச்சென்று முகத்தில் அடித்தாற்போல் கேட்க வேண்டும். 'நாம் ஒன்றாய்ப் படிச்சதும் பழகினதும், நீ சேகர் என்ற பையனுக்குக் காதல் கடிதம் எழுதினதும், மறக்கக் கூடிய விஷயங்களா? அந்தக் கடிதம் இன்னும் எங்கிட்டத்தான் இருக்கு. அதை உன் கணவர் கிட்டக் காட்டினால், உன் தெய்வீகக் காதலைத் தெரிந்து ரொம்ப சந்தோஷப்படுவார்' என்றதும் அவள் பதறித் துடிப்பாள். அப்புறம் அந்தக் கடிதத்துக்கு விலை நிர்ணயிக்க வேண்டும். 'ஆயிரம் ரூபாய் தரேன். என்னை விட்டுடு' என்று கெஞ்சுவாள். 'ஊஹூம்... அது சாதாரணக் கடிதமா? தெய்வீகக் காதல் காவியம்; அட்சர லட்சம் மதிப்புள்ளதாயிற்றே?' என்று சொல்லி, பத்தாயிரம், ஒன்பதாயிரம் என்று பேரம் பேச வேண்டும்.

மனதுக்குள் ஒத்திகை பார்த்துக்கொண்டே சுற்றிலும் விழிகளை ஓட்டிய கப்பு பின்னால் திரும்பியபோது—

அங்கே ஒரு மேஜையில் பிரேம் செய்து வைத்திருந்த போட்டோ கண்ணில் பட்டது.

ஓர் இளைஞனும் புவனாவும் சிரித்தவாறு உள்ள புகைப்படம் அது. 'மகிழ்ச்சியான தம்பதிகள்' என்ற சப்ஜெக்டுக்குப் பொருத்தமான போட்டோ.

புவனாவின் கணவன் யார்?

திடுக்கிட்டு எழுந்து அருகிலே போய், படத்தைப் பார்த்தான் கப்பு.

''கப்பு! என் கணவர் யார்னு தெரியுதா? கிராமத்தில் நமக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தாரே அவர்தான்... படிச்சு முடிச்சுட்டு இங்கே வேலை பார்த்துக்கிட்டிருந்த அவரைத் தற்செயலாக மயிலாப்பூர்க் கோயிலிலே சந்திச்சேன். என் பிரார்த்தனையும், உன் காதல் கடிதாசும் வீண் போகலே, கப்பு!''

மனத்துக்குள் கட்டியிருந்த கோட்டைகள் எல்லாம் சடசட என்று நொறுங்கி விழ, இடிந்து போய் உட்கார்ந்தான் அவன்.

''இன்னிக்கு உனக்கு இங்கேதான் சாப்பாடு. உனக்குப் பிடிச்ச வெங்காயச் சாம்பாரும், உருளைக் கிழங்கு வறுவலும், பால் பாயசமும் பண்ணித் தர்றேன். நீதான் கல்யாணச் சாப்பாடு சாப்பிடலியே?'' என்று பரிவோடு சொன்ன புவனா, ''ஏன் கப்பு, நீயும் இங்கே ஏதாவது வேலை பார்த்துக்கிட்டு இருந்தா என்ன? அவர் கிட்டச் சொல்லி, உனக்கு ஒரு நல்ல வேலை வாங்கித் தர ஏற்பாடு செய்யறேன்'' என்றாள்.

அவளுடைய களங்கமற்ற அன்பு பால்ய சிநேகிதனைத் தீயாகச் சுட்டது. அவள் முன்னால், கூனிக் குறுகி ஓர் அற்பப் புழுவாக நின்றான் அவன்.

அவனுடைய அற்பத்தனத்துக்கும் அக்கிரம எண்ணத்துக்கும் ஒரு தண்டனை வேண்டும் அவனுக்கு.

அந்தத் தண்டனையை அவனே விதித்துக் கொள்ளப் போகிறான்.

''இல்லை புவனா! என்னை மன்னிச்சுடு. இன்னொரு நாளைக்கு வரேன். இப்போ ஒரு முக்கியமான வேலை இருக்கு... அம்பத்தூரில் ஒரு தொழிற்சாலையிலே வேலை பார்க்கிறேன். நல்ல சம்பளம் கிடைக்குது... ரொம்பச் சந்தோஷமா இருக்கேன்...''என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டான் பழைய சிநேகிதன்!



## பூட்டுக்குப் பூட்டு

''சாவித் துவாரத்திற்கு இப்படி ஒரு சின்னக் கதவு வெச்சு அதிலே ஒரு பூட்டுப் போட்டிருக்கீங்களே எதுக்காக?''

''சாவித் துவாரத்திலே கண்ணை வெச்சு உள்ளே யாரும் பார்க்காமல் இருக்கத்தான்!''

- கே.ஆர்.எம்.



# சிவயோகம்

திருமுருக கிருபானந்தவாரியார்

**யோ**கம் என்னும் சொல்லுக்குப் பொருந்துதல் என்று பொருள். பொருந்துதல் என்ற உடனே (1) பொருந்துகின்ற பொருள் எது? (2) எந்தப் பொருளோடு பொருந்த வேண்டும்? (3)பின் பொருந்துதற்குரிய காரணம் யாது? (4) முன் பொருந்தாதிருந்தமைக்குக் காரணம் யாது? (5) ஒன்றை மற்றொன்றோடு பொருத்துகின்ற உபகார சக்தி எது? (6) பொருந்திய பின் விளையும் பயன் யாது? என்ற வினாக்கள் எழும். இவ் வினாக்கட்கு முறையே விடை பின்வருமாறு:

1. பொருந்துகின்ற பொருள் ஜீவான்மா;
2. பொருந்தப்படும் பொருள் பரமான்மா;
3. பின் பொருந்துதற்குரிய காரணம் பிரமானந்த வேட்கை;
4. முன் பொருந்தாதிருமைக்குக் காரணம் ஆணவ மல மறைப்பு;
5. பொருத்துகின்ற பொருள் இறைவனோடு தாதான்மியப்பட்டு நிற்கும் அனுக்கிரக சக்தி;
6. பொருந்தியபின் விளைவது சிவானந்தம்.

ஒருத்தியும் ஒருவனும் கூடி இன்புறுவார்களானால், கூடுகின்ற மங்கையும், கூட்டப்படுகின்ற மணாளனும், அவள் அவனைக் கூடுதற்குரிய காம வேட்கையும், முன் அவனைக் கூடாதிருந்தமைக்குக் காரணம் அவனை அறியாமையும், அவனை அவளுடன் கூட்டி வைத்து உதவி புரிகின்ற தோழியும், கூடிய பின்விளைகின்ற இன்பமும் போலென்றுணர்க.

இனி, ஒரு அறிவற்ற பொருள் மற்றொரு அறிவற்ற பொருளுடன் கூடி இன்புறுவதில்லை. ஒரு மரப் பலகை ஒரு மாம்பழத்துடன் கலந்து அதன் மதுரத்தை அறியாது. அறிவற்ற பொருளாயினும் அறிவுடைய பொருளுடன் கூடுங்கால் அறிவுடைய பொருள் இன்புறும். ஒரு மாங்கனியை ஒரு மனிதன் நுகர்ந்து இன்புறுவான். ஆயினும் அல்ப இன்பமேயாகும்; அதனினும் சிறந்தது அறிவுடைய பொருள் மற்றொரு அறிவுடைய பொருளுடன் கூடி இன்புறுவது. அறிவுடைய ஒருவனும் அறிவுடைய ஒருத்தியும் கூடுகின்றபொழுது மிகுந்த இன்பம் உண்டாகும். ஆயினும் அவ்வின்பம், கணப்பொழுதில் மறைவதும், தூய்மையில்லாததும், நோய் செய்வதும், வெறுக்கத்தக்கதுமாம்.

சிற்றறிவுடைய சீவான்மா பேரறிவுடைய பரமான்மாவோடு கூடுகின்ற பொழுது, தெவிட்டாத பேரின்பமும், அநுபவிக்க அநுபவிக்கக் குறையாத ஆனந்தமும் நிலைபேறான உண்மை இன்பமும் உண்டாகும். ஆதலால் சீவன் சிவத்துடன் பொருந்துகின்றதே சிவயோகமாம். இது சிவனுடன் பொருந்துதல் எனப் பொருள் படும்.

அட்டாங்க யோகமு மாதார மாறு
மவத்தையைந்தும்
விட்டேறிப் போன வெளிதனிலே
வியப் பொன்றுகண்டேன்
வட்டாகிச் செம்மதிப்பா லூறலுண்டு
மகிழ்ந்திருக்க
எட்டாத பேரின்ப மென்னை
விழுங்கி இருக்கின்றதே.

—பட்டினத்தடிகள்

நிற்க, பிராண வாயுவை முறைப்படி ஒடுக்கி உள்ளத்தை ஒடுக்குவது ஒரு முறை. அதற்கு ஹடயோகம் என்று பெயர். அது குருவின்பால் முறையே கற்றுப் பயின்று செய்யத்தக்கதாம். மிகவும் அரிய சாதனம். அதனை தூலயோகம் எனலாம். அதனை விடுத்து, சூக்கும முறையாக உள்ளத்தை ஒடுக்கி அவ்வழியே பிராணவாயு முதலியவற்றை ஒடுக்கி சிவத்துள் ஒடுங்குவதே சிவயோகம். அதுவே எளிது ஒரு பொருளை ஆழ்ந்து சிந்திக்கும்போது பிராண வாயு ஒடுங்குவது கண்கூடு: நாடோறும் சிவத்தையுன்னி சிந்தை முழுவதும் அப்பொருளிடம் வைத்து அசைவற்று சித்திர தீபம் போலிருக்கின், கருவி கரணங்கள் யாவும் ஒடுங்கும். அப்போது சிவவொளி நன்றாக வீசும், மலமறைப்பு அறவே நீங்கும். அவ்வழி சிவானந்தப் பெருவெள்ளம் பெருகி ஓடும்.

ஹடயோகத்தை அருணகிரி சுவாமிகள் மறுத்துரைக்குமாறு காண்க.

துருத்தி யெனும்படி கும்பித்து
 வாயுவைச் சுற்றிமுறித்
கருத்தி யுடம்பை யொறுக்கிலென்
 னாம்சிவ யோகமென்னுங்
குருத்தை யறிந்து முகமாறுடைக்குரு
 நாதன் சொன்ன
கருத்தை மனத்தி லிருத்துங் கண்டீர்
 முத்தி கைகண்டதே.

—கந்தரலங்காரம் (71)

சிவயோக முறையாக பிராண வாயுவை செம்மைப்படுத்துவதே செந்நெறியென தவ யோகர் போற்றுஞ் சிவயோகச் செம்மலாகிய எமது திருமூலர் கருமூலங் கெடுமாறு கூறு வதைக் காண்க.

ஆரிய நல்லன் குதிரை யிரண்டுள
வீசிப் பிடிக்கும் விரகறி வாரில்லை
கூரிய நாதன் குருவி னருள் பெற்றால்
வாரிப் பிடிக்க வசப்படுத்தானே.
புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை
நெறிப்பட வுள்ளே நின்மல மாக்கில்
உறுப்புச் சிவக்கும் உரோமம் கறுக்கும்
புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே.
ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்கும்
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாரில்லை
காற்றைப் பிடிக்குங் கணக்கறிவாளர்க்குக்
கூற்றை யுதைக்குங் குறியது வாரே.

—திருமந்திரம்

கால்பிடித்து மூலக் கனலைமதி மண்டலத்தின்
மேலெழுப்பில் தேகம் விழுமோ பராபரமே

—தாயுமானர்.

யோகம் என்பதனைப் பலர் பலவாறு கூறி னும் யாம் கூறும் சிவத்தோடு கலத்தலே பொருள் என்பதனைக் காசி காண்ட அருமை வாக்கா லறிக.

இந்திரிய விடயந் தன்னொடு சிவனைல்
 யோகமென்பார்சிலர் சிலர்தஞ்
சிந்தனை யுயிரோ டடைத லல்யோகமென்பரி
 தன்றியுஞ் சிலர்தாம்
முந்திய பிராண னபானனோடடைத
 லென்பரிம் மொழிந்தவை யனைத்து
மந்தயில் யோகமல்ல நற்சிவன்
 பரத்துடன் னடைவதே யோகம்.

# பார்த்தோம், சொல்கிறோம்!



● திருச்சி மாவட்டத்தில் ஓமந்தூர் கிராமத் தில் பெரியண்ணசாமி கோயில் உள்ளது. இக்கோயில் கருவறையில் எந்தவித உருவமும் கொண்ட சாமி சிலைகள் கிடையாது. திரு விழாக் காலங்களில் கூட மண்சட்டியான விளக்கில் எண்ணெ ஊற்றி திரியை ஏற்றி வைப்பதோடு சரி! திருச்சி மாவட்டத்தில் சமயபுரம் ஸ்ரீ மாரியம்மன் கோயில் திருவிழா வுக்கு அடுத்த படியாக அதிக பக்தர்கள் கூடும் திருவிழாச் சிறப்பு கொண்ட கோயில் இது!

—சிறுதையூர் தேவராஜன்

● நெல்லை மாவட்டம் தென்காசிக்கருகே யுள்ள ஒரு சிற்றூர் 'மீனாட்சிபுரம்'. பெரும் பான்மை ஹரிஜன வகுப்பைச் சார்ந்த 1200 குடும்பங்கள் – இந்து மற்றும் கிறிஸ்தவ இனத்தைச் சேர்ந்தவர்கள் – ஒருநாள் கூடி 'முஸ்லிம் இனமாக மாறி ஊரின் பெயரை யும் ''ரஹ்மத் நகர்'' என மாற்றினார்கள்.

—இ. சுப்பிரமணியன்




● மதுரை வடக்கு மாசி வீதியில் இருக்கும் ஒரு புதிய கட்டிடத்தின் சுவரில் எழுதப் பட்டுள்ள வாசகங்கள்:

''ரத்தத்தின் ரத்தமே இந்தச் சுவரில் விளம்பரம் செய்யாதே!''

''உடன் பிறப்பே இந்தச் சுவரில் விளம் பரம் செய்யாதே!''

● கோவையில் 'தீ' படத்திற்கு கூட்டமே இல்லை. விரைவில் அணையப் போகிறது. மதுரையில் பகல் 2.30 மணிக் காட்சிக்கு காலை 11.30 மணிக்கே கியூ நிற்கிறது.

இதற்கு எதிர்மாறாக கமலஹாசனின் 'ராம் லட்சுமண்' மதுரையில் கூட்டமில்லா மல் இருக்கக் கோவையில் ஹவுஸ் ஃபுல் காட்சிகளாக ஓடுகிறது. —சக்தி நாயனார்



# பார் புகழும் பாரிங்டன்

இருபத்தெட்டு வருடம் ராணுவத்தில் வேலை பார்த்து இரு உலகப் போர்களையும் சந்தித்த ஒருவரின் மகன் கென்னத் ஃபிராங்க் பாரிங்டன். சிறு குழந்தையாக இருக்கும் போதே தகப்பனார் பேட்டை எப்படிப் பிடிப்பது என்றும் பந்தை எப்படி வீசுவது என்றும் இவருக்குக் கற்றுக் கொடுத்தார். எட்டாவது வயது தொடங்கி பள்ளியில் கிரிக்கெட் விளையாடிய நினைவுகள் மறக்க முடியாதவை என்று அடிக்கடி கூறுவார் பாரிங்டன். பிறந்த ஊர் ரீடிங். தேதி: 1930 நவம்பர் 24.

ஆரம்பத்தில் பாரிங்டன் அந்த நகரத்தில் உள்ள ஒரு மோட்டார் பழுது பார்க்கும் நிலையத்தில்தான் எடுபிடி ஆளாக இருந்தார். ஆனால் சீக்கிரமே அந்த வேலை பிடிக்காமல் ரீடிங் கிரிக்கெட்சங்கத்தில் பந்தை பொறுக்கி எடுத்துக் கொடுப்பவராகச் சேர்ந்தார். அன்றிலிருந்து தமது கடைசி காலம் வரை கிரிக்கெட் அவரை விட்டு விலகவே இல்லை!

ஆரம்ப காலத்தில் அவர் நிதானப் பந்து வீச்சாளராகத்தான் இருந்தார். எட்டாவது ஒன்பதாவது இடத்தில் நுழைந்து பேட் செய்ய இவர் தயங்கியதே இல்லை.

1947 ஆம் வருடம் பதினேழுவது வயதில் இவரது வாழ்க்கையில் ஒரு திருப்புமுனை. இவரது சுழல் பந்து வீச்சைக் கவனித்த யாரோ ஒரு கிரிக்கெட் ரசிகர் சர்ரே கிரிக்கெட் சங்கத்துக்குப் பரிந்துரை செய்ய, பாரிங்டன் சற்றும் எதிர்பாராத விதமாக அழைப்பிதழ் பெற்றார். விளையாடிய முதல் மேட்சிலேயே ஐந்து விக்கெட்டுகளை எடுத்தார். தொடர்ந்து அச்சங்கத்துக்காக அவர் விளையாடினார்.

1949: ராணுவத்தில் சேர்ந்தார். ஜெர்மனியில் பணியாற்ற வேண்டியிருந்தது. அந்தத் தேசத்தில் இவரது பந்து வீச்சுக்கு ஏற்றாற்போல் பிட்ச் இருந்ததால் விக்கெட்டுகள் எக்கச்சக்கமாக இவருக்குக் கிடைத்தன.

1951: ஓவலுக்குத் திரும்பினார். அப்போது பந்து வீசுவதில் மட்டுமே முன்னணியில் இருந்து வந்தவர் பேட்டிங் செய்வதிலும் வல்லவராக மாறியிருந்தார். ''அதற்கு முக்கிய காரணம் எனது பயிற்சியாளர் ஆண்ட்ரு சாண்டம் தான்'' என்று கூறியுள்ளார் பாரிங்டன். அன்று ரன்கள் எடுக்க ஆரம்பித்த பாரிங்டன் ஓய்வு பெறும்வரை நிறுத்தவில்லை.

1955ம் வருடம்தான் இவர் இங்கிலாந்து டெஸ்ட் அணியில் நுழைய முடிந்தது. அன்றிலிருந்து பாரிங்டன் உலகப் பிரசித்தி பெற்ற பாட்ஸ்மேன் ஆனார். இவர் எடுத்த மொத்த ஓட்டங்கள் 51,714. இதில் டெஸ்ட் பந்தயங்களில் மட்டுமே 6806. அடித்த சதங்கள் 76. அதில் 20 சதங்கள் டெஸ்ட் பந்தயங்களில் மட்டுமே எடுக்கப்பட்டவை. இந்திய அணிக்கு எதிராக எடுக்கப்பட்டவை மூன்று. ஒரே சீசனில் 64 காட்சுகளைப் பிடித்துச் சாதனை செய்தவரும் இவர்தான்.



இந்தியாவுக்கு மானேஜராக வந்திருந்தபொழுது இந்தியக் கிரிக்கெட் ரசிகர்களை மிகவும் நேசித்தார். கலகலப்பாகச் சிரித்துப்பேசினார். ''நீங்கள் ஏன் வேகப் பந்து வீச்சாளர்களை உருவாக்கக் கூடாது? மாட்டுக்கறி உண்ணைச் செய்தால்தான் உடம்பில் வலு இருக்கும்'' என்றார்.

அவர் கூறியதில் விஞ்ஞான ரீதியாக வலு இல்லாமல் போகலாம்; ஆனால் அவரது நல் லெண்ணத்தில் வலு இருந்தது.

- அசோக்குமார்

---

பாட்டி: கஷ்டம் தாங்காம அந்த ராஜா முதலில் அரண்மனையை வித்தார்....அப்புறம் சேனையை வித்தார்.....அப்புறம் நகைகளை வித்தார்..."

10 வயது பேரன்: "இது என்ன கதை பாட்டி...ஒண்ணொண்ணா வித்துக்கிட்டு..."

பாட்டி: "இதாண்டா விக்கிரமாதித்தன் கதை!"

- உ. ராஜாஜி






● அட்டையில் இன்னொரு 'மொட்டை' நபரையும் சேர்த்து 'நான் பத்திரிகை நடத்துகிறேன்' எனச் சொல்ல வைத்திருக்கலாம். மத்திய அரசு நியூஸ்பிரிண்டுக்கு விதித்துள்ள புதிய வரி, பத்திரிகைத் தாளின் விலையை அரசு வர்த்தக கார்ப்பரேஷன் நாளுக்கு நாள் அதிகரிப்பது, பலேக்கர் கமிஷனின் தீர்ப்புப்படி சம்பள உயர்வுகள் எல்லாம் சேர்ந்து பின் விளைவு அதுவாகத்தான் இருக்கும்!
அரகண்டநல்லூர் — கே. பிரதாப்சிங்

● அட்டையில் உள்ள மூன்று மொட்டைகளைப் பார்த்ததும் வந்த சிரிப்பு 22—3—81 லிருந்து பத்திரிகை விலை 1—20 ஆக உயர்கிறது என்பதைப் படித்ததும் மாயமாய் மறைந்து விட்டது.
பரமக்குடி — நா. ஆறுமுகம்

● கல்கி இதழ் விலை உயர்வைப் படித்ததும் மனம் அதிர்ச்சி அடைந்தது. ஆனால் அது இரண்டு நிமிடம்தான். பக்கங்களைப் புரட்டப் புரட்ட மகிழ்ச்சி கரை புரண்டோடுகிறது. சமீபத்திய கல்கி இதழ்களின் சுவாரஸ்யத்தையும் முப்பது காசையும் ஒப்பிட்டுப் பார்த்தால் நஷ்டம் நிச்சயமாய் எங்களுக்கல்ல.
பெங்களூர்-21 — எஸ்.எல்.பி. குமார்

● கழுதை கத்துவதைக் கூட ரசித்துவிடலாம். ஆனால் இந்த வார கல்கியின் அட்டைப் படத்தில் நடனம் வரைந்திருக்கும் படத்தை ரசிக்க முடியவில்லை.
தஞ்சை — கே. ஆர். மனோகர்

● அட்டைப் படத்தையும், நடுப் பக்க ஜோன்ஸ் ஜோக்கையும் எத்தனை தடவை பார்த்துக் கொண்டிருந்தாலும், படித்துக் கொண்டே இருந்தாலும் சலிக்கவே இல்லை. அந்தக் காலத்து 'மாலி' அவர்களின் சித்திரங்களை நினைவூட்டுகிறது 'நடன'த்தின் அட்டைப் படம்.
விழுப்புரம் — ஆர். மார்க்கண்டன்

● இந்த இதழில் கார்ட்டூன்கள் ஏ-ஒன். அதிலும் ரயில்வே பட்ஜெட்டைப் பற்றியது சிறப்பாக இருந்தது. மக்கள் மனத்தில் உள்ளதை அப்படியே படம் பிடித்துக் காட்டி விட்டார் உமாபதி.
தஞ்சாவூர்-1 — பி. கே. தேவதாஸ்

● 'தப்புத் தாளங்கள்' என்று ஒரு இடி இடித்திருக்கிறீர்களே பார்க்கணும். கடைசி பத்தியில் வாணிஜெயும் தொலைக் காட்சியும் என்று லேசாக ஒரு கிண்டு கிண்டியிருக்கிறீர்களே பார்க்கணும்.
சும்மா சொல்லக் கூடாது. அது உங்களுக்குத்தான் வரும்.
சென்னை-87 — எம்.ஆர். சத்தியநாராயணன்

● தப்புத் தாளங்கள் தலையங்கத்தில் சரியான அணுகுமுறையோடு நேர்மையான விதத்தில் பட்ஜெட்டைப் பற்றி விமர்சனம் செய்துள்ளீர்கள். பொதுத் துறையில் ரூ. 16,000 கோடி மூலதனம் போட்டு ஒரு சதவீதம்தான் லாபம் வருகிறது என்பதையும், பெரும்பாலான பொதுத் துறை நிறுவனங்கள் கோடிக் கணக்கான நஷ்டத்தை உண்டாக்கி வருவதைத் தடுப்பதற்கு எவ்வித நடவடிக்கையும் அரசு எடுக்க முன் வராததையும் காணும் போது நம் நாட்டுக்கு விமோசனமே இல்லையோ என்றுதான் எண்ண வேண்டி உள்ளது
சேலம்-1 — இளங்குமரன்

● கண்ணதாசன் 'மனவாசம்' கட்டுரையில் காமராஜரை விமர்சித்துள்ளார். அது பொய்யா நிஜமா என்ற ஆராய்ச்சியில்நான் இறங்கத் தயாராயில்லை. ஆனால் ஒன்று தெரிகிறது. அவர் சேராத, நெருங்கிப் பழகாத தலைவர்கள் அதிர்ஷ்டசாலிகள் என்று. ''வனவாசம்'' ஆனாலும் ''மனவாசம்'' ஆனாலும் சொல்வதெல்லாம் ஒன்றுதான். கவிஞர் தமது காழ்ப்புணர்ச்சியைக் குறைத்துக் கொள்வது நல்லது.
மேட்டுப்பாளையம் — எம்.பி. ரத்னகுமார்

● வெற்றியைத் தவிர தோல்வியென்பதையே சந்திக்காத பெருந் தலைவரின் தோல்விக்குக் காரணம் தம்மைப் போன்ற தனிப்பட்டவர்களின் சுயநலத்துக்கு அவர் உதவாததே எனக் கூறும் கவியரசரின் கூற்றை, வயது முதிர்ந்த தேசியத் தொண்டன் என்ற முறையில் ஆதார பூர்வமாக மறுக்கிறேன்.
கோவில்பட்டி — கு. தாவூத்கான்

● வாணிஜெக்கு சுஜாதா அளித்த பேட்டியினை துளித் துளி துளியில் வெளியிட்டுள்ளீர்கள். அதில் அவர் ''இடுக்கிட்டான்'' போன்ற வார்த்தைகளைத் தவிர்ப்பதாகக் கூறியுள்ளார். ஆனால் அதே இதழில் ''வஸந்த் வஸந்த்'' கதையில் 'வஸந்த் திடுக்கிட்டான்' என்று அவர் எழுதியிருப்பதைப் பார்க்க நாங்கள் திடுக்கிடுகிறோம்!
மதுரை — அபராஜிதன்

● நளினி சாஸ்திரியின் விமரிசனங்களைப் படிப்பதற்கு முன் எதிர்பார்ப்புகள்: வழக்கம் போல டர்ர்ர்ர்....டப்....டப்....டும்! ஹரே ராமா என எழுதுவார். படித்த பின் எண்ணம்: பலே, புதிய உத்திகளுடனும் புதுமையாக எழுதுகிறாரே!
காட்பாடி — ஐ.ஜி. மோகன்

● அனுராதா ரமணன் எழுதிய ஓசையில் மன்னியின் அனுபவங்கள் சில குடும்பங்களில் இன்னும் நடக்கிறது. மன்னிகளை ஒருவிதத்தில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் மாதிரி நினைத்தாலும், அதே மாதிரி சலுகைகளும் கொடுத்தால் தேவலை.
சென்னை-90 — வி. ஜி. கனகம்

# பால்கிவாலா பேசுகிறார்



விறுவிறுப்பான ஒரு இசைக் கச்சேரியைக் கேட்பது போலிருந்தது பால்கிவாலாவின் பேச்சு.

இடம்: சென்னை பல்கலைக் கழக நூற்றாண்டு மண்டபம். சேப்பாக்கம் நோக்கி வந்த பஸ்களில் மாணவர்கள் திணியல்.

ஒரு பொதுக்கூட்டத்துக்கு இப்படியும் அரங்கம் நிரம்பி வழியுமா?

வெளியே ஹாய்யாகக் காற்று வாங்கிக் கொண்டிருந்த கார்கள் — அடேயப்பா! எண்ணி மாளாது!

உள்ளே ஏர்-கண்டிஷன் இல்லை. வெந்து புழுங்கியது. யாராவது அசைய வேண்டுமே! கொஞ்சம் அசந்தால் ஒரு அருமையான சங்கதியைக் கோட்டை விட்டு விடுவோமோ என்று கவனமாக... மிகக் கவனமாக...

இடையில் பால்கிவாலா ஜோக் அடித்து நிறுத்தியபோது மட்டும் கொல்லென்று சிரிப்பு.

கடைசியில் ஒரு பெரும் கரகோஷம்.

எம். ஸிடி. எம். சிதம்பரம் செட்டியார் நினைவு அறக் கட்டளை சார்பில், கையில் ஒரு சிறு குறிப்பும் இன்றி ஒன்றரை மணி நேரத்துக்கு அதிகமாகப் பேசிய பால்கிவாலா கூறிய சில கருத்துக்கள்:

- இந்திரா காந்தி முன் அருமையான சந்தர்ப்பம் இருக்கிறது. பெரும்பான்மை மக்கள் அவர் பின்னால்; மாநில அரசு முதல்வர்கள் கைகட்டி நிற்கவும் ரெடி; கட்சியின் — நாட்டின் தம் நிகரற்ற தலைவர். தேசத்தை முன்னேற்ற எவ்வளவு அனுகூலமான வாய்ப்பு! தேசம் முன்னேறவில்லையெனில் காரணம் 33 வருஷங்களாகப் பின் பற்றி வரப்படும் கொள்கைகள். அவை பயன் தரவில்லை என உணர்ந்து வேறு புரட்சிகரமான மாற்றுக் கொள்கைகளை ஏற்க வேண்டும்.

- அதிக நேரம் தாமதிக்கலாகாது. தேசம் ஒரு கொந்தளிப்பான நிலையில் உள்ளது. விவசாயிகள் கிளர்ச்சியாகவும், பிற்பட்டோருக்கு இட ஒதுக்கீடு எதிர்ப்புக் கிளர்ச்சியாகவும் கொந்தளிப்பு பல வடிவமெடுக்கிறது. சாமானியன் தனக்கு நியாயம் வழங்கப் படவில்லை என்று நன்றாக உணர்ந்துவிட்டான்.

- அரசாங்கத்தில் தாமதங்களைத் தவிர்க்க வேண்டும். நவீன கம்ப்யூட்டரை நிறுவக் கோரப்பட்ட லைசென்ஸைப் பெறத் தாமதமாயிற்று. இடைக் காலத்தில் அதன் விலை பல மடங்கு அதிகரித்து விட்டது. இப்படித் தாமதங்களாலேயே நமக்கு ஏற்படும் நஷ்டம் எவ்வளவு என்று கணக்கிட்டால் தலை சுற்றும்!

- இதனால்தானோ என்னவோ ஹிந்தி மொழியில் நேற்று என்பதற்கும் 'கல்'; நாளை என்பதற்கும் 'கல்'! பீகாரில் எதுவுமே நகர்வதில்லை; கங்கையைத் தவிர என்கிறார்கள். அப்படி ஒரு மெத்தனம்.

- நமது தேசத்தில்தான் திறமைக்கு வரி போடுகிறார்கள். திறமையாக ஒருவன் செயல்பட்டு அதிகமாகச் சம்பாதித்தால் அவனுக்கு வருமான வரிதவிர, சர்சார்ஜ், சர்டாக்ஸ் எல்லாம் உண்டு. திறமையைக் காட்ட வேண்டும் என்ற ஆர்வமே போய் விடுகிறது.

- இதே நேரத்தில் அயோக்கியர்களை அரசு தட்டிக் கொடுக்கிறது. கருப்புப் பணப் பத்திர சன்மானம் வழங்குகிறது.

- அபரிமித வரிகள், கண்ட்ரோல்கள் எல்லாம் நேர்மையின்மையை வளர்க்கும் பொருளாதாரக் கொள்கைகள்.

- பிரிட்டனில் பி.பி.ஸி. ரேடியோவும், டி.வி.யும் அரசுத் துறையைச் சேர்ந்தவை. ஆனால் தனித்தியங்கும் அதிகாரம் பெற்றவை. ஒரு சமயம் பிரதமர் வில்ஸன் நாட்டு நலன் கருதி ஒரு செய்தியை வெளியிட வேண்டாம் என்றார். பி.பி.ஸி. நிர்வாகிகள் ஆழ்ந்த கவனம் செலுத்தி விவாதித்தத பிறகு பிரமரின் கோரிக்கையில் நியாயமில்லை என்று நிராகரித்து விட்டனர்!

- இங்கு வானொலியும் டி. வி.யும் அரசின் பி. ஆர். ஓ.க்கள்.

- மக்களிடம் பெறப்படும் பணத்துக்கு பாங்கு தரும் வட்டிக்கும் பாங்கு கடன் தரும்போது வசூலிக்கும் வட்டிக்கும் இடையில் உள்ள வித்தியாசம் உலகிலேயே நமது நாட்டில்தான் அதிகம்!

- நிதி அமைச்சர் பட்ஜெட்டில் வருமான வரி, சொத்து வரி முதலானவற்றுக்கு வருமான வரம்பை உயர்த்தியுள்ளார்- பல ஆண்டுகளுக்குப் பிறகு. இந்த இடைக்காலத்தில் பண வீக்கத்தால் ரூபாய் இழந்துள்ள மதிப்பை கணக்கிலெடுத்துப் பார்த்தோமானால் நாம் முன்பிருந்த நிலையிலேயேதான் இருக்கிறோம். சலுகை ஏதும் பெற்றுவிடவில்லை என்று உணர்வோம். மேல் நாட்டில் இதெல்லாம் பட்ஜெட்டில் இடம் பெறுவதே கிடையாது. நாணயத்தின் வாங்கும் சக்தி குறைந்தாலோ, அல்லது அதிகரித்தாலோ அதற்கேற்ப வருமான வரி வரம்புகள் இயல்பாகவே கூடவோ குறையவோ வேண்டும் என்று சட்டம் இருக்கிறது. அங்கே உரிமையாக

# தற்காலிக நாற்காலி



டி. என். கே.

சங்கீத கலாநிதி பட்டம் பெற்றதற்காக டி. என். கிருஷ்ணனுக்கு நாதோபாசனு நடத்திய பாராட்டு விழா. தலைமை: ஹாண்டே. அமைச்சரின் ஒன்றரைமணி நேரத்தாமதத்தைத் தாங்க யாராலும் முடியாமல்ப் போக, சபா காரியதரிசி, தமிழ் நாடு இயல் இசை நாடக மன்றம் தலைவர் டி. வி. நாராயணசுவாமியைத் ''தாற்காலிகமாகத் தலைமை ஏற்குமாறு'' கேட்டுக்கொண்டார்.

அவையோர் நகைக்க, ''தாற்காலிகத் தலைமை என்பது எனக்குப் பழகிப்போன ஒன்று'' எனக் கூறி அவர்களை மேலும் சிரிப்பில் ஆழ்த்தினர், டி.வி.என். ''நான் ஒருவன் இருக்கிறேன் என்ற தைரியத்திலேயே பல சந்தர்ப்பங்களில் அமைச்சர்கள் தாமதமாய் வருவார்கள்! ஏன், ஒரு சமயம் ஆளுனரே தாமதமாக வந்தபோது, அவர் சார்பில் தாற்காலிகத் தலைமை ஏற்ற பெருமை எனக்குண்டு!''

கிருஷ்ணனின் சிறப்புக்களை அவர் கூறி முடிக்குமுன்னர் அமைச்சர் வந்துவிட, ''தாற்காலிகத் தலைமையிலிருந்து விடுதலை பெறுவதாக அறிவித்தார் டி. வி. என்.

''நிரந்தரத் தலைவரே நீங்கள்தான்'' என்று ஹாண்டே உபசாரமாகக் கூற, டி.வி.என்., ''ரொம்பச் சரி; நிரந்தரத் தாற்காலிகத் தலைமை எனக்கே தான்'' என்று போட்டார் ஒரு போடு!



வி. வி. எஸ்.

சங்கீத கலாநிதி கிருஷ்ணனை மேலும் பலர் பாராட்டிய மேடையில் ''வயலின் வரலாறு'' என்ற நூல் வெளியிடப்பெற்றது. வயலின் பேராசிரியர் வி. வி. சுப்பிரமணியம் எழுதிய இந்த நூல், வயலினின் இந்தியப் பூர்வீகம், மேல் நாடுகளில் அதன் வளர்ச்சி, அதன் அமைப்பு, சிறப்புக்கள், அதனைக் கையாண்ட மேதைகள் என்று பல அரிய தகவல்களைத் தருகிறது. ஆழ்ந்த ஆய்வு இருந்தாலும் விஷயம் சுவாரஸ்யமானது; சுவைபடக் கூறப்பட்டுள்ளது. கிடைக்குமிடம்: இந்திய இசை பதிப்பகம், 41, பந்தர் தெரு, சென்னை-600001. விலை ரூ. 6.

---

மக்கள்பெற்றுள்ளஒன்று. இங்கே அமைச்சர் அளிக்கும் சலுகையாக உள்ளது. நமது நன்றியையும் பாராட்டுதலையும் பெற்றுப் புகழ் அடைகிறார்!

விவசாயிகளுக்கு வரி போடக்கூடாது என்கிறார்கள். நகர்ப்புறத்தில் இருப்பவர்களைத்தான் நேரடி வரிகள் பாதிக்கின்றன. ஆனால் கிராமப்புற விவசாயிகள் எல்லாருமே ஏழைகள் அல்ல. பெரும் பணக்காரர்களும் பலர் உண்டு. உச்ச வரம்பால் பாதிக்கப்படாதிருக்க இவர்களுக்குவழி தெரியும். இப்படிப்பட்டவர்களுக்கு நேர்முக வரி விதித்தால் என்ன தவறு? ஏன் பாரபட்சம்?

ஒரு பொருளைப் பல ஆண்டுகளுக்கு முன் வாங்கி இன்று ஒருவன் விற்றால் அதிகப்படி விலை பெறுகிறான். அதற்கு வரி போடுகிறது அரசு. ஆனால் நாணயத்தின் வாங்கும் சக்தி குறைந்து போயிருப்பதைக் கணக்கில் எடுத்துக் கொண்டால் அவனுக்கு அப்படி ஒன்றும் பிரமாத லாபம் கிடைத்துவிடவில்லை என்பது புரியும். அநீதியான வரி இது.

நமது தேசத்தில் இன்று மிக அதிகமாக வளர்ச்சியுற்று வருவது அரசாங்கம், அதன் கட்டுப்பாடுகள். கண்ட்ரோல்களை நிர்வகிக்க அரசாங்கத்தின் ஊழியர் பட்டாளம் அதிகரிக்கிறது. அரசாங்கத்தின் செலவுகள் மளமளவென்று அதிகரிக்கின்றன. ஓர் ஐந்து ஆண்டுகள் அரசாங்கம் யாரையும் வேலைக்கு எடுக்காது என்று அறிவித்தால் அரசின் நிர்வாகச் செலவு குறையும்.

பட்ஜெட்டின் வருமான வரம்புப்படி 90 சதவீதம் வருமான வரி அதிகாரிகளே வருமான வரி செலுத்த வேண்டியிராது! இதிலிருந்து அவர்களுக்குத் தரப்படும் ஊதியத்தின் அளவை நாம் உணரலாம். இவர்கள்தான் கோடீஸ்வரர்களைத் தட்டிக்கேட்டு வருமான வரி வசூலிக்கப் போகிறவர்கள்! ஒருவரைப் பொறுப்பான பதவியில் வைக்கும் போது அதற்குத் தகுதியான ஊதியம் தர வேண்டும்.

'அனாதை ஆசிரமம் ஆரம்பிக்கிறேன் எனக்கு உதவு' என்று ஒருவர் கேட்டால், 'ஆகட்டும், இரண்டு அனாதைகளை அனுப்புகிறேன்' என்றா கூறுவது? தேசத்தை முன்னேற்ற மக்களுக்கு உதவும் படியான திட்டங்கள் அமைய வேண்டும்.

கறுப்புப் பணப் பத்திரத்தை நம்பியா பட்ஜெட் தயாரிப்பது? வெட்கக்கேடல்லவா?

இந்தப் பற்றுக்குறை பட்ஜெட்டினால் நிச்சயமாகப் பண வீக்கம் அதிகரிக்கும். ரூபாயின் வாங்கும் சக்தி குறையும். அதாவது விலைவாசிகள் ஏறும்.

நம்மிடமுள்ள மிகப் பெரிய மூலதனம் நமது ஜனத் தொகைதான். ஒரு பக்கம் குடும்பக் கட்டுப்பாடு முயற்சிகளைத் தீவிரமாக்க வேண்டும். அது ஆள்வோரின் முயற்சியின்றி மக்கள் இயக்கமாகவே மலர ஆவன செய்ய வேண்டும். மறுபுறம் நமது ஜனத் தொகையை எப்படித் திறம்படப் பயன்படுத்தி நாட்டின் செல்வத்தைப் பெருக்கலாம் என்று யோசிக்க வேண்டும்.

சமுதாய நீதி என்பதை செல்வத்தைப் பெருக்காமல் ஏற்படுத்த முடியாது. எனவே உற்பத்தி பெருகவும், வேலையில்லாத் திண்டாட்டம் ஒழியவும் வேண்டும்.

● ஏழைமை ஒழிப்பு, பட்ஜெட்டின் குறிக்கோள் எனில் வேலை வாய்ப்புக்களை அது பெருக்குவதாக இருத்தல் அவசியம். ஆனால் நடப்பது என்ன? ஓராண்டில் ஒன்பது மில்லியன் புதிய வேலைவாய்ப்புக்கள் ஏற்பட்டால் வேலையில்லாத் திண்டாட்டத்தை நாளடைவில் சமாளிக்கலாம் என்று ஓர் ஆய்வு கூறுகிறது. ஐந்தாண்டுத் திட்டமோ ஐந்தாண்டுகளில் நாலு மிலியன் வேலை வாய்ப்புக்களை ஏற்படுத்தப் போவதாகக் கூறுகிறது. தனியார் துறையில் அரை மிலியன் வேலை வாய்ப்புக்கள் ஏற்படும்! எப்போது ஏழைமை ஒழியும்?

● முப்பத்தி மூன்று ஆண்டுகளுக்குப் பிறகும் தொழில் வளப் பெருக்கத்துக்கு அஸ்திவாரம் எனக்கருதப்படும் Infra Structurc நமது நாட்டில் இன்னமும் தடுமாறிக் கொண்டிருக்கிறது. இந்த அஸ்திவாரக் கற்கள் யாவை? நிலக்கரி, பெட்ரோலியம், மின்சாரம், மரம், சாலைகள், ரயில்வே போக்குவரத்துப் போன்றவை.

● மின்சக்தி உற்பத்தி பற்றி 800 ஆய்வுகள் சுதந்திர இந்தியாவில் நடத்தப்பட்டுள்ளன. எல்லா அறிக்கைகளும் அரசுக் காரியாலயங்களில் தூசுப் படிய உறங்குகின்றன.

● சென்ற ஆண்டு பட்ஜெட் 'ஏற்றுமதி இறக்குமதி வங்கி தொடங்கப்பட வேண்டும்' என்றது. இந்த ஆண்டு பட்ஜெட் 'ஏற்றுமதி இறக்குமதி வங்கி தொடங்கப்படும்' என்கிறது. இப்படி ஒரு காரியத்தைத் துவங்குவோம் என்று தீர்மானம் பண்ணவே நமக்கு ஒரு வருஷத்துக்கு மேலாகிறது. எப்படி முன்னேறுவோம்?

● ஐந்து லட்சம் கிராமங்களில் 97000 கிராமங்களே இன்று குடிநீர் வசதி பெற்றுள்ளன. மற்றக் கிராமங்களில் மக்கள் தண்ணீர் பெறச் செலவழிக்கும் நேரத்தைக் கணக்கிட்டாலே மலைப்பாயிருக்கிறது: அவர்களுடைய சக்தி, நேரமெல்லாம் இப்படி வீணாகிறது.

● ரயில்வே: பயணிகள் 60 சதம் அதிகரித்துள்ள காலகட்டத்தில் அவர்களுக்கான ரயில் பெட்டிகள் 1.4 சதம் அதிகரித்துள்ளது!

● சிமெண்ட்: கண்ட்ரோல் விலை ரூ. 28. பம்பாயில் ரூ. 85 முதல் 95 வரை பிளாக்கில் விற்கிறது. "இதற்காக அரசு அயல் நாட்டிலிருந்து சிமெண்ட் வரவழைக்கிறது. இங்கு நமது தேச சிமெண்ட் உற்பத்தியாளருக்குத் தரப்படுவதை விட 300 சதம் அதிக விலை தந்து சிமெண்ட்டை அயல் நாட்டிலிருந்து அரசு தருவிக்கிறது!

● இருக்கிற சிமெண்ட் ஆலைகளே, ரயில் வாகன் தட்டுப்பாடு, மின்சாரத் தட்டுப்பாடு காரணமாகத் தங்கள் ஆற்றலை முழுமையாகப் பயன்படுத்த முடியவில்லை. இதற்கு வழி கண்டு உற்பத்தியை அதிகரிக்கச் செய்யாமல் புதிய சிமெண்ட் ஆலைகளை நிறுவ அனுமதி வழங்குகிறது அரசு.

● டாண்டன் கமிட்டி ஒரு அறிக்கை சமர்ப்பித்துள்ளது. ஓர் ஆண்டில் பத்து அல்லது பதினொரு சதம் ஏற்றுமதி அதிகரித்தோமானால் பத்து ஆண்டுகளில் உலக நாடுகளின் மொத்த ஏற்றுமதி வர்த்தகத்தில் நமது பங்கு ஒரு சதமாக இருக்கும் என்று அந்த அறிக்கை கூறுகிறது. எவ்வளவு கஷ்டமான காரியத்தை நாம் நிறைவேற்றியாக வேண்டும் என்று இதிலிருந்து விளங்கும்.

● அமெரிக்காவில் நான் தூதராக இருந்தபோது அங்குள்ள வர்த்தகர்கள் நம்முடன் வியாபாரம் செய்யப் பெரும் தடையாக இருப்பது அடிக்கடி மாறுகிற நமது சட்டங்கள்தான் என்றனர். 'இன்று நாங்கள் உங்களுடன் செய்துகொள்ளும் வர்த்தக ஒப்பந்தம் அடுத்த ஆண்டு செல்லாது எனில் நாங்கள் எப்படி உங்களின் பொருள்களுக்கு ஆர்டர் தர முடியும்?' என்றனர். ஏப்ரல் 1980க்குப் பிறகு இன்றுவரை ஓராண்டுக்கும் குறைவான காலகட்டத்தில் ஏற்றுமதிக் கொள்கையில் 88 மாறுதல்களையும் இறக்குமதிக் கொள்கையில் 54 மாறுதல்களையும் அரசு செய்துள்ளது! குறைந்தபட்சமான கண்ட்ரோல்கள் நிலையான சட்டங்கள் தேவை.

● நமது சட்டங்கள் எவ்வளவு குழப்பமானவை என்பதற்கு ஒரு உதாரணம்: இது ஊனமுற்றோர் ஆண்டு. ஊனமுற்ற குழந்தையைப் பெற்று வளர்க்க நேரும் தந்தை தன் வருமானத்திலிருந்து குழந்தைக்காகும் வைத்தியச் செலவு முதலானவற்றைக் குறைத்துக் காட்டலாம். அதற்கு வருமான வரி கிடையாது. ஆனால் தந்தை மட்டுமின்றி தாயும் வேலைக்குப் போய்ச் சம்பாதிப்பாளேயானால் இந்தச் சலுகை பெற்றோர் இருவருக்குமே கிடையாது!

● நமது பொருளாதாரக் கொள்கைகள் மாறவேண்டும். கேடிக்கும் போலீஸ்காரனுக்கும் அரசியல்வாதிக்கும் இடையே வேற்றுமையே இல்லாதபடிக்கு ஓர் அதர்மப் போக்கை வளர்க்கும் இந்தப் பொருளாதாரக் கொள்கைகள் மாறினாலன்றி தேசம் துரிதமாக முன்னேற முடியாது.

தொகுப்பு : குட்டிகிருஷ்ணன்

---

அவன்: இவருடைய அண்ணன் அமெரிக்காவில் இருக்கார்! தம்பி ரஷ்யாவில் இருக்கான்!
இவன்:- பிறகு இவர் மட்டும் ஏன் ஜெயிலில் இருக்கார்!?
அவன் : அவர்களும் அங்கே ஜெயிலில் தானே இருக்காங்க! -கடலூர் கன்னியப்பன்



# கப்பலோட்டியவன் காவியமானன்!

'நாட்டிலெங்கும் சுதந்திர வாஞ்சையை நாட்டி னாய்' என்று தொடங்கும் பாரதியாரின் பாடல் ஒன்றுக்கு பாரதி வாழ்ந்த காலத்தில் வெளியான ''ஜன்ம பூமி'' என்னும் நூலிலே ''கலெக்டர் விஞ்ச் சிதம்பரம் பிள்ளைக்குச் சொல்லுதல்'' என்று தலைப்புத் தரப் பட்டிருக்கிறது. இதிலே திருநெல்வேலி கலெக்டரான ஆங்கிலேயர் மிகுந்த ஆணவத்துடன் சிதம்பரனாரை அவ மதித்துப், அதட்டியும் மிரட்டியும் பேசுகின்றார். ஆளும் சாதியின் ஆணவம் வெளிப்படுகிறது.

''நாட்டிலெங்கும் சுதந்திர வாஞ்சையை
நாட்டினாய் கனல் மூட்டினாய்
வாட்டி உன்னை மடக்கிச் சிறைக்குள்ளே
மாட்டுவேன் வலி காட்டுவேன்''

என்று கூறிக் கப்பலோட்டிய தமிழரைத் தனது நெற்றிக் கண் காட்டி விஞ்ச் மிரட்டுகிறார்.

''ஓட்டம் நாங்கள் எடுக்கவென்றே—கப்பல்
ஓட்டினாய்
''கோழைப்பட்ட ஜனங்களுக்குண்மைகள்
கூறினாய் சட்டம் மீறினாய்''
''அடிமைப் பேடிகள் தம்மை மனிதர்கள்
ஆக்கினாய் புன்மை போக்கினாய்
''கூட்டங்கூடி வந்தேமாதர மென்று
கோஷித்தாய் எமைத் தூஷித்தாய்''

'வந்தே மாதரம்' என்று கூறுவதே ஆங்கிலேயரைத் தூஷிப்பதாகும் என்கிறார் நெல்லைக் கலெக்டர். அவர் இன்னும் சொல்கிறார்:

''அடிமைப் பேடிகள் தம்மை மனிதர்கள்
ஆக்கினாய் புன்மை போக்கினாய்!
''எங்குமிந்த சுயராஜ்ய விருப்பத்தை
ஏவினாய் — விதை தூவினாய்!
''சிங்கம் செய்யும் தொழிலைச் சிறுமுயல்
செய்யவோ நீங்கள் உய்யவோ?''



இப்படி தேசபக்தர் சிதம்பரனார் மீது குற்றங்கள் சுமத்திய கலெக்டர் துரைமகனார் அதற்கான தண்டனையையும் சொல்லிவிடுகிறார்.

''சுட்டு வீழ்த்தியே புத்தி வருத்திடச்
சொல்லுவேன் — குத்திக் கொல்
லுவேன்
''தட்டிப் பேசுவோ ருண்டோ சிறைக்
குள்ளே
தள்ளுவேன் — பழி கொள்ளு
வேன்.''

கலெக்டர் துரைமகனாரின் கருத்தாகக் கவிஞர் பெருமகனார் கூறுவதெல்லாம் வெறும் கற்பனை அல்ல. உண்மையில் சிதம்பரனாரிடம் கலெக்டர் விஞ்ச் நேரில் கூறியவைதான்!

விடுதலைப் போராட்ட காலத்திலே இந்தப் பாட்டுகள் காங்கிரஸ் பிரசார மேடைகள் தோறும் நாடக பாணியிலே பாடப்பட்டன. கேட்ட மக்கள் ஆவேசம் கொண்டனர்.

எழுதப் படிக்கத் தெரியாத ஏழைத் தமிழனும் இந்தப் பாடலைக் கேட்டு எழுச்சி கொண்டான்; தோள் தட்டி ஆரவாரித்தான்.

1912ல் வீரன் வாஞ்சிநாதன் கலெக்டர் ஆஷ் துரையைக் கொன்றதை யொட்டி உருவாக்கப்பட்ட திருநெல்வேலி சதி வழக்கிலே நீதிபதிகளிலே ஒருவராக இருந்த திரு சங்கரன் நாயர், பாரதி பாடல்களைத் தமது தீர்ப்பிலே மொழிபெயர்த்துக் கொடுத்திருக்கிறார்.

இந்தப் பாடல்களின் விளைவுதான் கலெக்டர் ஆஷ் துரை படுகொலையான நிகழ்ச்சி என்றும் நாயர் தமது தீர்ப்பிலே விமர்சித்தார்.

உண்மையில் ஆஷ் துரை கொலையுண்ட செய்தி கேட்டபோது பாரதியார் மகிழ்ச்சியடையவில்லை. வேதனைப்பட்டு விம்மினார். ''காதல் மனைவியுடன் கைகோர்த்து மகிழ்ந்திருந்த நேரத்திலே ஆஷைக் கொலை செய்வதா?' என்று எழுதித் தமது மன வேதனையை வெளிப்படுத்தினார். ஆம்; பாரதி வெறும் தேசாபிமானிமட்டுமல்ல; அதற்கும் மேம்பட்ட மனிதாபிமானி! மகா கவியாக உள்ள எவரும் நிச்சயம் மனிதாபிமானியாகவும் இருப்பார். ஆயுதப் புரட்சியை ''வெடிக்காய் வியாபாரம்'' என்று கூறிக் கேலிக் குரலில் பாரதியார் கண்டனம் செய்து எழுதினார். இந்த உண்மை அறியாமல் நீதிபதி சங்கரன் நாயர் ஆஷ் துரையின் கொலைக்குப் பாரதியாரின் பாடல்களைக் காரணமாக்கினார்.

ம.பொ.சி

(மயிலை இலக்கிய வட்டம் - பாரதிய வித்யா பவனச் சொற்பொழிவிலிருந்து)

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press,

# தகடுகள் டிஸ்க்ராலாக இருந்தால் உங்களால் சேதம் பண்ண முடியாது



பெரும் வாரியான முக்கிய தொழில் சாலைகளுக்கான இரும்பு, நிலக்கரி மற்றும் பிரத்யேக தாதுப் பொருள்களை பெருமளவு கையாளுவதற்கு டிஸ்க்ரால் தகடுகள் மிகவும் உகந்ததாக இருக்கின்றன. டிஸ்க்ரால் தகடுகளின் பயனை எரிக்கனவாய்—கூடைகள், தடுப்புத் தகடுகள், மதருக்கதவுகள், வேகமாக அசைகின்ற தகடுகள், தானிய இயந்திரங்களில் உபயோகிக்கும் பிரத்யேக தகடுகள், சுத்தியல் மில்கள் போன்ற இடங்களில் நன்கு காணலாம் .... முரட்டுத்தனமான உபயோகிக்கும் இடங்களிலும், தேய்வின் பயங்கரம் அதிகமாக உள்ள இடங்களிலும் டிஸ்க்ரால் மிகவும் பயன் படுகிறது.

பிரத்யேக தேய்வுத்தடுப்பின் திறத்தினாலும், புத்திசாலித்தனமான உலோகக்கலவையால் செய்யப்பட்டதாலும், டிஸ்க்ரால் தகடுகள், கீறல்களாலும், அரைத்தூள்களாலும், அல்லது வெட்டுதலாலும் ஏற்படுகின்ற சேதத்தைத் தடுக்கின்றன. இதன் பயன், அடிக்கடி இயந்திரங்களின் பாகங்களை மாற்றும் நிலைமையையும், அனாவசியமான நேரச்செலவுகளையும், பணச்செலவுகளையும் தடுக்கிறது. எல்லாவற்றைக் காட்டிலும் டிஸ்க்ரால் கருவிகளை உருவாக்குவதில் எளிமையையும் உறுதியையும் இணைக்கிறது. தகடுகளின் இணைப்பு, இயந்திர வேலைப்பாடு, வெட்டுதல், துளையிடுதல் மற்றும் வளைத்தல், எல்லாம் எளிது- உங்களுக்கு வேண்டுமா?

**மேலும் விவரங்களுக்கு கீழ்க்கண்டவர்களுக்கு எழுதவும்:**

- டைரக்டர் ஆப் மார்க்கெட்டிங்
  தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி
  லிமிடெட்
  43, சௌரங்கி ரோடு, கல்கத்தா-700 071

- ஜாயின்ட் சீப் ஆப் புரொடக்‌ஷன் கண்ட்ரோல்
  தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி
  லிமிடெட்
  ஜம்ஷெட்பூர் 831 001

- சீனியர் அப்ளிகேஷன் இன்ஜினியர்
  தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி
  லிமிடெட்
  நியூ இந்தியா அஸ்யூரன்ஸ் பில்டிங்
  87, மஹாத்மா காந்தி ரோடு
  பம்பாய் 400 023

- சீனியர் அப்ளிகேஷன் இன்ஜினியர்
  தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி
  லிமிடெட்
  பேங்க் ஆப் பரோடா பில்டிங்
  16, பார்லிமென்ட் ஸ்ட்ரீட்
  புது டெல்லி 110 001

- சீனியர் அப்ளிகேஷன் இன்ஜினியர்
  தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி
  லிமிடெட்
  20ஜெ, மஹாத்மா காந்தி ரோடு
  பெங்களூர் 560 001

- சீனியர் அப்ளிகேஷன் இன்ஜினியர்
  தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி
  லிமிடெட்
  பார்க் சென்டர், 24 பார்க் ஸ்ட்ரீட்
  கல்கத்தா 700 016

- அப்ளிகேஷன் இன்ஜினியர்
  தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி
  லிமிடெட், இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்
  31 நார்த் பீச் ரோடு [மூன்றுவது மாடி]
  மதராஸ் 600 001




**டாடா ஸ்டீல்**

TIS 3563R3

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

அடுத்த இதழில்

ஸ்ரீவேணுகோபாலன்

எழுதும்

# சுவர்ணமுகி

சரித்திரத் தொடர்

ஆரம்பம்



திரு வேங்கடவர் மலை;
சுவர்ணமுக்கி ஆறு;
சந்திரகிரி கோட்டை;
நாராயண வன பூமி-
நாட்டில் வெள்ளைக்காரர்கள் கால் ஊன்றுவதற்கு சரித்திரம் இங்கே சுவர்ணமுகி நீரோடு சலசலத்தது!
மகத்தான வரலாற்றின் ஆரம்பம் இந்தச் சிறிய பூமியில்தான் நிகழ்ந்தது!
அதன் கதை . . .